KALKI
8.2.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

காதல் ஸ்பெஷல்!

## நிறம் மாறுமோ நேசம்...

## “தனுஷோடு நடிக்கப் போறேன்!”



# கல்கி





கல்கி

தரம் நிரந்தரம்

18.2.2007

"ஒரு தடவை ஷீரடி போய் வந்தாத் தெரியும், மனரீதியா, உடல் ரீதியா எவ்வளவு மாற்றங்கள், நிம்மதி கிடைக்குதுன்னு. எங்க சுபயாத்ரா மூலமா போன பக்தர்கள் ஒவ்வொருத்தரும் என்கிட்ட இது பத்தி கதை கதையா சொல்லியிருக்காங்க" என்கிறார் மைலாப்பூர் தெற்கு மாட வீதியிலிருக்கும் 'சுப யாத்ரா' ஆன்மிக டூர் சர்வீஸ் நிறுவன உரிமையாளர் குமரேசன்.

"1989ல் மாணவர்கள் சுற்றுலாவுக்கென 'வியோ டூர்ஸ் அண்டு டிராவல்ஸ்' என்கிற பெயரில் தொடங்கப்பட்ட எங்கள் கம்பெனி, இன்று மாதத்துக்கு நான்கு முறை ஷீரடிக்குச் சென்று வரும் நிறுவனமாய் வளர்ந்திருப்பது பாபாவின் ஆசியாலும் அருளாலும்தான். காசி, பத்ரிநாத், கேதர்நாத், முக்திநாத், கைலாஷ், மானசரோவர் என்று முக்கியமான ஸ்தலங்களுக்குப் பக்தர்களை



# பரவசம் தந்த

சென்னையிலிருந்து அழைத்துப்போன முதல் நிறுவனம் எங்களுடையது என்பதில் பெருமை கொள்கிறோம். 1996-97ல் சுபயாத்ரா, ஷீரடிக்கான ஆன்மிக டூரினை அறிமுகப்படுத்தியதிலிருந்து இதுவரை பதினெட்டாயிரம் பக்தர்களை அழைத்துச் சென்றுள்ளோம். அதனை லட்சமாக்க வேண்டும் என்பதுதான் எங்களுடைய லட்சியம்" என்கிறார் குமரேசன்.

ஐம்பது பேர் அடங்கிய குழுவை மாதம் நான்குமுறை ஷீரடிக்கு அழைத்துச் செல்லும் இவர்கள், பக்தர்களின் வயது மற்றும் உடல்நிலைக்கேற்ப கனிவுடன் கவனித்துக் கொள்கிறார்கள். நடக்க இயலாதவர்களை வீல்சேர் மூலம் அழைத்துப் போகும் வசதியும் உண்டாம்.

ஷீரடியில் கோயிலுக்கு எதிரிலேயே நல்ல காற்றோட்டமும் தூய்மையும் வசதியும் கொண்ட தங்குமிடங்களை ஏற்பாடு செய்கிறார்கள். ஒரு நாளைக்கு ஐந்து முறைகூட பாபாவை தரிசனம் செய்துவர இது வசதியாய்



அமைந்து விடுகிறது.

"கோயிலில் இரவு பத்து மணிக்கு பாபாவைத் தூங்க வைக்கும் ஷேஜ் ஆரத்தி, காலை ஐந்து மணிக்கு பாபாவை எழுப்பிக் குளிப்பாட்டும் காக்கட ஆரத்திகளை மிக அருகிலிருந்து தரிசிக்க ஏற்பாடு செய்கிறோம்.

பாபா முதலில் வந்த மாருதி ஆலயம், தங்கியிருந்த மசூதி, ஓய்வெடுத்த வேப்பமரம், வலம் வந்த தோட்டம், அவரின் சமாதி, சிலை, பாபாவின் பொருட்கள் அமைந்துள்ள மியூசியம் என அனைத்தையும் கண்ணாரக் கண்டு, மனதார பூஜித்துத் திரும்பும் ஷீரடி அனுபவத்தை, வாழ்நாளில் என்றும் மறக்க முடியாத அளவுக்குச் சேவை செய்வதில் எங்கள் சுபயாத்ரா சந்தோஷமடைகிறது" என்கிறார் குமரேசன் நெகிழ்ச்சியுடன்.

அண்மையில் சுபயாத்ரா மூலம் ஷீரடி போய் வந்திருக்கும் என்.என்.பாபு, "சுபயாத்ரா மூலம் சென்றதால் நல்ல கவனிப்பு, பாதுகாப்பு

"ஷீரடி அனுபவத்தை வாழ்நாளில் மறக்க முடியாது!"

# பாபா!

கிடைத்தது, எந்தவித அலட்டலுமின்றி போய் வந்தேன். பாபாவை தரிசித்த பரவசத்தோடு சுபயாத்ராவின் உதவியையும் நினைவில் நிற்கிற மாதிரிச் செய்து விட்டார்கள்" என்றார் நம்மிடம்.

சந்திப்பு: **சிபி**



• என்.என்.பாபு





**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்**
**எம். மோகன், ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

காதல் எல்லோரிடமும் மிக எளிதாகப் பூத்துவிடுகிறது. ஆனால், அதனை தக்கவைத்துக் கொள்ளத்தான் பாடுபட வேண்டியிருக்கிறது. கல்யாணம் வரைகூட பல காதல்கள் வருவதில்லை என்பதுதான் யதார்த்தம். இந்நிலையில் கல்யாணத்துக்குப் பிறகு நிறம் மாறுமா நேசமென்று காதல் மணம் புரிந்த தம்பதியர் மூவரைக் கேட்டோம்.

### வார்த்தைகள் தேவையில்லை!

**ரமேஷ், மகாலட்சுமி :** ஆத்மார்த்தமான நண்பர்களைப் பார்த்தா நமக்கே சில விஷயங்கள் ஆச்சர்யமா இருக்கும். அவங்க அதிகமா பேசிக்க மாட்டாங்க. மாப்ளே, மச்சான் மாதிரியான அலட்டல் வார்த்தைகள் இருக்காது.

அதே மாதிரிதான் காதலர்களுக்கும். கல்யாணத்துக்கு முன்போ, பின்போ ஒரு கட்டத்துக்குப் பிறகு வார்த்தைகள் குறைஞ்சு போயிடும். பத்து நிமிஷம் பேச வேண்டிய விஷயத்தை ஒரு பார்வையாலேயே சொல்லிடுகிற அளவுக்குப் புரிதல் வந்துடும். அது இல்லாம பீச்சுக்குப் போறதிலோ, பார்க்குக்குப் போறதிலோ, 'நாங்க லவ் மேரேஜ்'னு தம்பட்டம் அடிச்சுக்கிறதிலோ என்ன இருக்கு!

'உனக்காக நான் தியாகம் பண்றேன். உனக்காக எதையும் தாங்குவேன்'ங்கற நினைப்புகூட தேவையில்லைங்கறதுதான் எங்க கருத்து.

ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்ச பிறகு, முழுசா உணர்ந்த பிறகு வர்ற அன்பு அமைதிமயமானது. அங்கு வார்த்தைகளுக்கு இடமே இல்லை. அந்த அன்பு தேய்வதற்கோ, குறைவதற்கோ வாய்ப்பு இல்லை. அது ஒரு மோன நிலைப்பாடு.

# நிறம் மாறுமோ



புருஷோத்தமன்-சாரதா

### ஈகோ இல்லாத நேசம்!

**ரூபா, ராஜ்குமார் :** காதல் புரிதலின் அடிப்படையில் வருகிற விஷயம். பரஸ்பரம் புரிஞ்சு தான் கல்யாணம் பண்ணிக்கிறோம். அதுக்குப் பின்னால் எல்லாக் குடும்பங்களிலும் வருகிற மாதிரி சின்னச் சின்ன சண்டைகள், கருத்து வேறுபாடுகள்



வரத்தான் செய்யும். அதெல்லாம் காலை நேரத்துப் பனி மாதிரி கொஞ்ச நேரத்து விஷயம். அதுகூட அவங்களுக்கு இன்னும் கொஞ்சம் சுவாரஸ்யத்தைத்தான் கொடுக்கும். காதல் திருமணங்கள்ல 'எனக்கு நீ, உனக்கு நான்'ங்கற விஷயம் மட்டுந்தான் இருக்கும். இது ஈகோ இல்லாத நேசத்தை வளர்க்கும்.

வெறுத்து ஒதுக்கிய பெற்றோர் நேசமும் கண்டுகொள்ளாத சமூக உறவுகளுக்கு மத்தியில் 'நாமும் வெற்றி பெறணும்'ங்கற உத்வேகத்தைக் கொடுக்கிற காதலும் நாளும் நாளும் வளருமே தவிர, மாற வாய்ப்பே இல்லை."

**வழியெங்கும் வானவில்!**

**புருஷோத்தமன், சாரதா :** எங்களுக்குக் கல்யாணமான இத்தனை வருஷத்துல சின்னச் சின்ன கோபதாபங்கள், கருத்து மோதல்கள் வந்தாலும் அதையெல்லாம் தாண்டி வாழ்க்கை சுமுகமாவும், சந்தோஷமாவும் போறதுக்குக் காரணம் நேசமில்லாம வேறெதுவும் இல்ல.



ரமேஷ்–மகாலட்சுமி

# நேசம்...

எங்க அனுபவத்துல காதல், வாழ்க்கைப் பயணத்துல ஒரு வானவில்லா கூடவே வந்துட்டிருக்குன்னே சொல்லலாம்.

**- அருணா செந்தில்குமரன்**

அட்டை, படங்கள் : **ஸ்ரீஹரி**



ரூபா–ராஜ்குமார்



''நீதிமன்றங்கள் கட்டப் பஞ்சாயத்துகளாக ஆகிவிடக் கூடாது. தமிழ்நாட்டை நீதிபதிகள் ஆள வேண்டும் என்று நினைக்கக் கூடாது. ஆகாயத்திலிருந்து குதித்தவர்கள் போல சில நீதிபதிகள் நடந்து கொள்கிறார்கள்'' - நீதித் துறையைப் பற்றி அமைச்சர் ஆற்காடு வீராசாமியின்

நீதித் துறை, நிர்வாகம், சட்ட மன்றம் ஆகியவை தனித்தனியாகவும், அதே சமயத்தில் உறுதியாகவும் செயல்பட வேண்டியது ஜனநாயக நாட்டில் மிக, மிக அவசியமான ஒன்று. இங்கே நிர்வாகம் என்று குறிப்பிடும்போது ஆளும் அரசியல் வாதிகளும் அதில் அடக்கம். மக்களுக்குத் தாங்கள் ஏற்றுக்கொண்ட கொள்கைகளின் அடிப்படையில், பல திட்டங்களைச் செயல்படுத்த விரும்புகிறார் அரசியல்வாதி. அது தொடர்பான ஆணைகள் போடும்போதும், அமல்படுத்தும்போதும் தவறுகள் ஏற்படுகின்றன. பாதிக்கப்பட்டவர்கள் நிவாரணம் தேடி நீதிமன்றத்துக்குச் செல்கிறார்கள். சில சமயங்களில் நீதிபதிகளும் கடுமையான வார்த்தைகளை உபயோகப்படுத்தியிருக்கிறார்கள். இதனால் அதிகார வர்க்கத்துக்கு ஆத்திரம் பீறிட்டு வருகிறது. ஆளும் அரசியல்வாதிகள் நீதிமன்றத்தோடு மோதுவது நமது நாட்டில் தொடர்ந்து நடந்து வரும் ஒன்றுதான்.

'ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டம்' செல்லுபடியாகாது என்று நேரு காலத்தில் சொன்னது உச்சநீதிமன்றம். சொத்துக்கள் வைத்துக்கொள்ளும் அடிப்படை உரிமைகளில் தலையிடுகிறது அந்தச் சட்டம் என்று காரணம் சொன்னது நீதிமன்றம். தமது சோஷலிஸக் கொள்கைகளை அமல்படுத்த முட்டுக்கட்டை போடுகிறதே நீதிமன்றம் என்று வெடித்தார் நேரு. 'கொள்கைகளை எப்படி நடைமுறைப்படுத்துவது என்று எனக்குத் தெரியும்' என்று சவால்விடும் வகையிலும் பேசினார். அப்போது உச்ச நீதிமன்றம் 'உங்கள் கொள்கைகளில் தலையிட மாட்டோம். ஆனால் அவற்றை அமல்படுத்தும்போது போடும் உத்தரவுகள் சட்டத்துக்கு விரோதமாக இருந்தால் தலையிட வேண்டிய கடமையும், வலிமையும் எங்களுக்கு உண்டு' என்று சொல்லிவிட்டது. ஒருமுறை அலகாபாத் உயர்நீதிமன்றம், தவறு செய்த இரு போலீஸ் அதிகாரிகளுக்குத் தண்டனை வழங்கும்போது 'உத்தரப்பிரதேசத்தில் காவல்துறை ஒட்டுமொத்தமாகவே மிக மோசம்' என்று சொல்லிவிட்டது. பின்னர் உச்ச நீதிமன்றம் 'அதுபோல் பொதுவாக கருத்துச் சொல்லக் கூடாது' என்று

# ''எல்லைகளைத் தாண்டாதீர்கள்!''

## முன்னாள் நீதிபதி மோகன்



அதிரடி கமெண்ட்டுகள் தமிழகத்தில் கொந்தளிப்பை ஏற்படுத்தியிருக்கின்றன. "ஆற்காடு வீராசாமி பூனைக்கு மணி கட்டியிருக்கிறார். இதற்குப் பிறகாவது நாட்டில் நியாயம், நேர்மை தழைக்கப்படும்" என்று அவரை வழி மொழிந்திருக்கிறார் முதல்வர்!



எச்சரிக்கை செய்தது.

சமூகத்தில் எல்லாத் துறைகளிலும் சரிவு ஏற்பட்டு வருவதை மறுக்க முடியாது. அரசியல் சிபாரிசில் சிலர் நீதிபதிகளாக வந்து விடுவதால் அரசியல்வாதிகள் நீதித்துறையை அலட்சியமாகக் கருதுகின்றனர். சில அரசு வழக்கறிஞர்கள் ஆளும் அரசியல்வாதிகளிடம் உண்மையைக் கூறாமலும், தகவல்களைத் திரித்துக் கூறுவதாலும் கூட உரசல்கள் வரும். ஒரு விவகாரம் நீதிமன்றத்தின் பரிசிலனையில் இருக்கும் போதே அது தொடர்பான மேல் நடவடிக்கையை அரசு எடுக்குமானால், நீதிமன்றத்தில் முறைப்படி தெரிவிக்க வேண்டியது அரசு வழக்கறிஞரின் கடமை. பத்திரிகைகளில் வரும் செய்திகளால் உணர்ச்சி வசப்பட்டு, கருத்துகளை சொல்வதும், தீர்ப்புகள் எழுதுவதும் கூடத் தவறுதான்.

இன்றைக்கு நாடாளுமன்றமும் சட்டமன்றமும் தினசரி அமளி மண்டபங்களாகிவிட்டன. எந்தவித விவாதமுமின்றி நூற்றுக்கணக்கில் ஒரே சமயத்தில் சட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. இச் சட்டங்களை எதிர்க்கவும் அரசியல்வாதிகளின் தவறுகளைத் தட்டிக் கேட்கவும் கடைசிப் புகலிடமாக மக்கள் நீதிமன்றத்துக்கு நம்பிக்கையுடன் செல்கிறார்கள். அக்கிரமங்களையும், ஜனநாயக விரோதச் செயல்களையும் கண்டிக்க வேண்டிய அவசியமும் நீதிமன்றத்துக்கு வந்து விடுகிறது. இதனால் அரசியல்வாதிகள் சூடாகி விடுகிறார்கள். நீதிமன்றத்தின் சவால்கள் அதிகரிக்கின்றன.

ஒவ்வொரு துறையும் தமக்குள்ள பொறுப்புகளை உணர்ந்து, வரம்பு மீறாமல் எல்லைகளுக்குள் செயல்பட்டால் மோதல், மனக்கசப்புகள் வராது."

தொகுப்பு: **ப்ரியன்**
படம்: **ராஜன்**



# மக்கள்

சரியான வயதில் திருமணம் செய்து கொண்டு நன்மக்களைப் பெறுவதும் வாழ்வின் கடமை என்று வேதங்கள் சொல்கின்றன. குழந்தை பாக்கியத்தைப் 'பேறு' என்கிறோம். ஒருவர் வாழ்ந்த வாழ்க்கையை அர்த்தமுள்ள தாக்குவது பிள்ளைப் பேறுதான் என்கின்றன நம் வாழ்வியல் நடைமுறைகள். இந்தியாவில் மக்கள் தொகைப் பெருக்கம் எவ்வளவு பெரிய பிரச்னையோ, அதே அளவுக்கு, திருமணமான ஐந்து தம்பதியரில், ஒருவருக்குக் குழந்தை இல்லாததும் பிரச்னையாக உள்ளது! இந்த விகிதம் நாளுக்கு நாள் பல காரணங்களால் அதிகரித்து வருகிறது. திருமணமாகி ஒரு வருட தாம்பத்யத்துக்குப் பிறகும், தம்பதியருக்குக் குழந்தைப் பேறு இல்லாத நிலையை ஆயுர்வேதத்தில் 'அனபத்யா' என்கிறோம். நவீன மருத்துவம் sub fertility என்கிறது.

**குழந்தைப் பேறின்மைக்கான காரணங்கள்:**

பண்டைய காலத்தில் குழந்தைப் பேறின்மைக்குப் பெண்களையே குற்றம் கூறுவார்கள். ஆனால் இன்றைய சூழ்நிலையில் குழந்தைப் பேறின்மைக்குக் காரணமாக ஆணோ, பெண்ணோ அல்லது இருவருமேகூட இருக்கலாம் என்ற விஞ்ஞான ரீதியான அணுகுமுறை நடைமுறைக்கு வந்துள்ளது. விந்து அணுக்களில் 'உள்ள குறைபாடுகள் (anomalies of sperm) சினை முட்டை உருவாவதில் உள்ள குறைபாடுகள் (problems of ovulation) ஆர்த்தவக ஸ்ரோதஸ் என்கிற சினை முட்டை செல்லும் பாதையில் ஏற்படும் அடைப்புகள் (tubal pathology) போன்றவை முக்கிய காரணங்களாகச் சொல்லப்படுகின்றன. பெண்ணுறுப்பில் உள்ள கபத்தன்மை மாறுபடுவதும் ஒரு காரணம்.

பெண்களுக்கு வயது ஏறிக்கொண்டே போனால், குழந்தை பெறும் வாய்ப்பு குறைந்து கொண்டே போகும். மேலும் கர்ப்ப காலத்தில் சில பிரச்னைகள் வருவதற்கும் வாய்ப்புகள் உள்ளன. சுருங்கச் சொன்னால் முப்பத்தைந்து வயதுக்கு மேல், பெண்களுக்குக் குழந்தை பெறும் பாக்

டாக்டர் எல்.மஹாதேவன்

கியம் வெகுவாகக் குறைகிறது. ஆனால், இன்று நடுத்தர வர்க்கத்தினரிடையே பெண்களின் திருமண வயது ஏறிக் கொண்டே போகிறது!

**மன அழுத்தம், சமூகம்!**

குழந்தை இல்லாத தம்பதியரை ஒரு யூனிட்டாக - ஒரே அம்சமாகக் கருதி, சிகிச்சை செய்ய வேண்டும் என்று அறிவுறுத்துகிறது ஆயுர்வேதம்.

குழந்தை இல்லாத தம்பதியருக்கு- தங்களுக்கு குழந்தை இல்லையே என்ற மனக்குறை, அதனால் ஏற்படுகிற மன அழுத்தம், குற்ற உணர்வு, சமூகத்தின் ஏச்சுப் பேச்சுக்கள் எனப் பல பிரச்னைகள் உள்ளன. குழந்தை பிறக்கும் வரை குழந்தை இல்லையே என்ற கவலை மனத்தைக் கொல்லும். பிறக்கின்ற குழந்தை ஆரோக்கியமாகப் பிறக்க வேண்டும் என்ற பெரும் கவலை கர்ப்பம் தரித்ததும் ஏற்படும்!

# பேறு!

**விந்தணுக்கள் - குழந்தைப் பேறின்மை**

ஓர் ஆணுக்கு விந்தணுக்களின் எண்ணிக்கை இருபது மில்லியனுக்கும் அதிகமாக இருக்க வேண்டும். அதில் ஐம்பது சதவிகித அணுக்கள் முன்னோக்கிச் செல்லும் தன்மையுடையனவாக (motility) இருக்க வேண்டும். விந்தின் உருவ அமைப்பு எந்தவிதக் குறைபாடும் இல்லாமல் இருக்க வேண்டும். இவற்றில் வரும் குறைகளை சுக்ர துஷ்டி (Oligospermia), மந்த சுக்ரம் (Asthenospermia), சுக்ர விக்ருதி (Teratospermia) என்று பிரித்துக் கூறுகிறது ஆயுர்வேதம். நன்

## 17



மக்களைப் பெறுவதற்காக ஆயுர்வேதத்தில் வாஜீகரணம் என்று தனி சிகிச்சையே உண்டு.

ஆண் உறுப்பும் விந்துப்பையும் உடலின் வெளியே இருப்பதற்குக் காரணம் உடலின் உஷ்ணத்திலிருந்து மூன்று டிகிரிக்குக் குறைவாக உள்ள நிலையில்தான் விந்தணுக்கள் உற்பத்தியாகும்.

விந்தணுக்கள் பாதிக்கப்படுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவற்றைக் குறித்து அடுத்த வாரம் பார்ப்போம்.

(தொடரும்)

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி- 7

உடல் இளைப்புக்குரிய எளிய உணவு முறைகளை எழுதி முதல் பரிசாக தன்வந்தரி வெள்ளி டாலரினைப் பெறுபவர் மன்னை சதிரா, மன்னை:

பார்லியையும் கொள்ளையும் சம அளவு எடுத்து மிஷினில் கொடுத்து அரைக்கவும். பின் அந்த மாவில் மூன்று டீஸ்பூன் எடுத்து வெறும் வாணலியில் வறுத்து ஒரு டம்ளர் தண்ணீர் விட்டுக் கிளறவும். மாவு வெந்ததும் இறக்கி, உப்பு, மோர், சுக்குப் பொடி சேர்த்து, நறுக்கிய பச்சை மிளகாய், எலுமிச்சம் பழச் சாறு கலந்து அருந்தவும். இது எடையைக் குறைக்கும். வேக





வைத்த புழுங்கல் அரிசி ரவையுடன் இஞ்சிச்சாறும் எலுமிச்சம் பழச்சாறும் கலந்து உப்பு போட்டு தினமும் இரண்டு டம்ளர் குடித்தாலும் உடல் எடை குறையும்.

இரண்டாவது பரிசாக டாக்டர் எல். மஹாதேவனின் தேவமருந்து முதல் பாகத்தைப் பெறுபவர் ஆர். பிரேமா, பெங்களூர்.

1. வயிற்றை நிரப்பும் பச்சைக் காய்கறிகள் (காரட், பீன்ஸ், பச்சைபட்டாணி இளசு, முட்டைகோஸ், வெள்ளரிக்காய், முளை கட்டிய பச்சைப்பயிறு சேர்த்த சாலட், தேன் விட்டு)

2. எண்ணெயில் வெந்ததைத் தவிர்த்து ஆவியில் வெந்ததையே கூடுமானவரை சாப்பிடுவது.

3. பகலில் தூங்குவதில்லை. காலை, மாலை ஒரு மணி நேரம் வாக்கிங்.

4. அரிசிச் சோறைத் தவிர்த்து கோதுமை (சப்பாத்தி) பயன்படுத்துவது.

5. எதையும் குறிப்பிட்ட நேரத்தில் சாப்பிடுவது, தூங்குவது.

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி- 8

மூக்கடைப்பு, தொடர்ச்சியானத் தும்மலை நிறுத்த எளிய கை வத்யக் குறிப்பை எழுதி முதல் பரிசாக தன்வந்திரி டாலர் பெறுபவர் ஆர். ராஜலட்சுமி, கரூர்.

சளி பிடித்து மூக்கடைப்பு ஏற்பட்டால் மிளகு ஒன்றை ஊசியில் குத்தி விளக்கில் காட்டிச், சுட்டு அதன் புகையை உள்ளுக்கு இழுத்து வந்தால் மூக்கடைப்பு மறையும். மஞ்சளையும் இதே போல சுட்டுப் புகையை உறிஞ்சினாலும் குணம் கிடைக்கும்.

தொடர்ந்து தும்மல் வந்து கொண்டிருந்தால் விபூதியைத் தண்ணீரில் குழைத்து மூக்கின் மேல் தடவினால் தும்மல் வருவது நின்று விடும்.

தும்மல் காரணமாக சளியும், நமைச்சலும் உண்டாகும். முசுமுசுக்கை இலைகளைச் சுத்தம் செய்து, அரைத்து தோசை மாவில் கலந்து, காலையில் தோசை வார்த்துச் சாப்பிட்டால் நல்ல நிவாரணம் கிடைக்கும்.

இரண்டாவது பரிசாக டாக்டர் எல்.மஹாதேவனின் தேவமருந்து முதல் பாகத்தைப் பெறுபவர் எஸ்.கமலா, திருச்சி.

நான் அடுக்குத் தும்மலால் தினமும் காலையில் மிகவும் கஷ்டப்பட்டேன். அப்போது என் அம்மா கஷாயம் செய்து கொடுத்தார். ஒரே வாரத்தில் தும்மல் நின்று விட்டது. துளசி இலை 10, வெற்றிலை 4, மிளகு 10, சிற்றரத்தை 1 துண்டு, அதிமதுரம் 1 துண்டு (இவை மூன்றையும் பொடித்துக் கொள்ளவும்)

ஒரு பாத்திரத்தில் ஒரு டம்ளர் தண்ணீர் எடுத்துக் கொதிக்க வைத்து அதில் துளசி இலை, கிள்ளிய வெற்றிலை போட்டு, பொடி செய்த மிளகு, சிற்றரத்தை, அதிமதுரம் சேர்த்து நன்கு கொதிக்க வைத்து வடிகட்டி அதில் சிறிது தேன் கலந்து சாப்பிட்டால் அடுக்குத் தும்மல், தொண்டை கரகரப்பு எல்லாம் சரியாகி விடும்.

## தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி - 14

கர்ப்ப காலத்தில் பெண்கள் உண்ண வேண்டிய எளிய சத்தான ஆகாரங்களை எழுதி அனுப்புங்கள்.
முதல் பரிசாக
டாக்டர் மஹாதேவன்
தன்வந்தரி டாலர் பரிசளிப்பார்.
இரண்டாவது பரிசாக
டாக்டர் எல். மஹாதேவனின்
தேவமருந்து முதல் பாகம்
பரிசளிக்கப்படும்.
கடைசி தேதி: 19.2.2007
ஆசிரியர் தீர்ப்பே இறுதி

# கிரிக்கெட் சுவாமி!

சுவாமி பார்த்தசாரதி... மும்பை அருகிலிருக்கும் வேதாந்தா அகாடமியின் நிறுவனர். கடந்த அறுபது வருடங்களாக எடை கூடாமல், இடுப்புச் சுற்றளவு அதிகரிக்காமல் ஒரே சீராகத் தமது உடலைப் பராமரித்து வருகிறார். எழுபத்தொன்பது வயதில் அறுபத்தேழு கிலோ; இடுப்பளவு முப்பத்திரண்டு அங்குலம் என்று வியக்க வைக்கிறார். இது எப்படி சாத்தியம்?

"நான் தினமும் பிரம்ம முகூர்த்தம் என்று சிறப்பித்துச் சொல்லப்படும், அதிகாலை நேரத்தில் எழுந்து விடுகிறேன். நடையும் யோகாவும் எனது தினசரி விஷயங்கள். இன்னமும் வேதாந்தா அகாடமியின் கிரிக்கெட் அணியில் இடம் பெற்று கிரிக்கெட் ஆடிக் கொண்டிருக்கிறேன். உடம்பைச் சுறுசுறுப்பாகவும், திடமாகவும் வைத்திருப்பதைப் போல் என் மனத்தையும் மகிழ்ச்சியுடனும், புத்துணர்ச்சியுடனும் எப்போதும் வைத்துக் கொள்கிறேன்'' என்று சொல்லிச் சிரிக்கிறார் சுவாமி பார்த்தசாரதி.

இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் இருக்கும் முக்கியமான கிரிக்கெட் அணிகளுடன் ஆடி, வேதாந்தா அகாடமி அணி பல முறை வெற்றி பெற்றிருக்கிறதாம்! சுவாமி பார்த்தசாரதி பலமுறை சிறப்பாக ஆடி, 'மேன் ஆஃப் தி மேட்ச்' ஆகி இருக்கிறார். இவரது பந்து வீச்சும் அபாரமானது. ஓர் ஓவரில் ஆறு விக்கெட்களை வீழ்த்திய சாதனையாளர்.

''வாழ்க்கையும், கிரிக்கெட்டும் ஒன்றுதான். கிரிக்கெட்டில் வீசப்பட்டுவிட்ட பந்தைப் பற்றிக் கவலைப்பட்டுப் பிரயோஜனமில்லை. அடுத்த பந்து எப்படி இருக்குமோ என்று கவலைப்படுவதால் ஆகப்போவது ஒன்றுமில்லை. இதோ இப்போது வீசப்படும் பந்தை எப்படி எதிர்கொள்ளப்போகிறோம் என்பதுதான் முக்கியம். நம் கவனம் முழுமையாக அதில்தான் இருக்க வேண்டும். அப்போதுதான் முழுத் திறமையையும் காட்டி ஆட முடியும். வாழ்க்கையும் கிரிக்கெட்டைப் போலத்தான். கடந்த காலத்தைப் பற்றிக் கவலைப் பட்டுப் பயனில்லை. எதிர்காலத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பதால் ஆகப்போவதென்ன? இந்தத் தருணம் நீ எப்படி வாழ்கிறாய் என்று பார்'' என்று வெகு யதார்த்தமாக வாழ்க்கை குறித்து விளக்கம் தருகிறார் சுவாமி பார்த்த சாரதி.

வேதாந்தா அகாடமியில் மூன்றாண்டு கால முழு நேர பட்டப் படிப்பாக வேதாந்தமும், உபநிஷத்தும் கற்றுக் கொடுப்பவர், இந்தியாவின் பல்வேறு நகரங்களுக்கும் சென்று தொடர் பகவத் கீதை சொற்பொழிவுகளை ஆற்றி வருகிறார்.

சென்னையில் பிப்ரவரி 21 முதல் 25 வரை தினமும் மாலை 6 மணிக்கு, காமராஜர் அரங்கில் இவரது சொற்பொழிவுகளைக் கேட்கலாம்.

- எஸ். சந்திரமௌலி



எடுத்தவங்களுக்குத்தான் ஸ்டேட் ஃபர்ஸ்ட் அங்கீகாரம் கிடைக்கும். பாண்டிச்சேரியில ஃப்ரெஞ்ச் எடுத்தாலும் அந்த அங்கீகாரம் கிடைக்கும். இன்னொன்னு பெரும்பாலும் பாண்டிச்சேரி மீடியா மட்டும்தான் எங்க சாதனைகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பாங்க."

**முதலிடம் கிடைக்கும்னு நினைச்சீங்களா?**

"கண்டிப்பா. தூக்கத்துலகூட நான் ஸ்டேட் ஃபர்ஸ்ட் வாங்குற மாதிரிதான் கனவு காணுவேன். என் ஸ்கூல் ஆயாவுக்குக்கூட தெரியும், நான் ஸ்டேட் ஃபர்ஸ்ட் வாங்கக் கடுமையா முயற்சி செய்தேன்னு. நான் படிச்ச அமலோற்பவம் பள்ளியில கடுமையான பயிற்சிகள் கொடுத்தாங்க. காலை ஏழு மணி முதல் இரவு ஏழு வரைக்கும் ஸ்கூல் நடத்தினாங்க. இரவு பத்து மணிக்குப் படுத்து காலை நான்கு மணிக்கு எழணும்ங்கிறது கட்டாய விதி. இதனால அந்த ஒரு வருஷமும் நான் படிச்சுட்டேதான் இருந்தேன்."

**டிப்ஸ்?**

"பத்து மதிப்பெண்களுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுக்கறது ரொம்ப தப்பு. ரெண்டு மார்க்கை சாதாரணமா நினைச்சு விடாதீங்க. செண்டமைத்

**த**மிழ்நாட்டுச் சாதனையாளர்கள் மட்டும்தான் இத்தனை வாரங்களாக இந்தப் பகுதியை அலங்கரித்தார்கள். மாறுதலுக்கு பாண்டிச்சேரி யூனியன் பிரதேசத்தில் முதலிடம் பெற்ற தீபாவை இந்த வாரம் சந்திப்போம். 2002ஆம் ஆண்டின் ஸ்டேட் டாப்பரான தீபா, பாண்டிச்சேரி சூழல், ப்ளஸ் டூ ஞாபகங்கள், ப்ளஸ் டூ டிப்ஸ் என்று சகலமும் பேசினார்...

**பாண்டிச்சேரியில இருந்து ஸ்டேட் ஃபர்ஸ்ட் வாங்கறதுல என்ன வித்தியாசம் இருக்கு?**

"தமிழ்நாட்டுக்கும் பாண்டிச்சேரிக்கும் ஒரே சிலபஸ்தான். தேர்வுகள் ஒரே நாளில்தான் நடக்கும். எங்களுடைய விடைத் தாள்கள்கூட தமிழ்நாட்டுலதான் திருத்தப்படும். ஆனா, சில வித்யாசங்கள் இருக்கு. தமிழ்நாட்டுல தமிழைப் பாடமா

# தீபா

+2



# "ரெண்டு மார்க்கை விடாதீங்க!"

**2002, ப்ளஸ் டூ தேர்வில் பாண்டிச்சேரி டாப்பரான தீபா எடுத்த மதிப்பெண்கள் 1182. பிட்ஸ் பிலானியில் பி.ஈ. முடித்துவிட்டு இப்போது சென்னையிலுள்ள காக்னிசென்ட் ஐ.டி. நிறுவனத்தில் மென்பொருள் பிரிவில் வேலை பார்த்து வருகிறார். எம்.பி.ஏ. படிப்பது இவரது அடுத்த கனவு.**

தீர்மானிக்கிறது ரெண்டு மதிப்பெண்கள்தான். நான் ரெண்டு மதிப்பெண்கள்ல பண்ணின சாதாரணத் தவறுகளால இயற்பியல், வேதியியல்ல சென்டம் மிஸ் பண்ணினேன். எல்லாப் பாடங்களிலும் ஐந்து சதவிகிதம் படிச்சு அரைகுறையா இருக்கறதுக்குப் பதிலா, சில சேப்டர்கள்ல தொண்ணூறு சதவிகிதம் தெரிஞ்சு வைச்சுக்கறது நல்லது."

**உங்க வெற்றிக்கு யார் தூண்டுகோலா இருந்தாங்க?**

"நான் பத்தாவது வரைக்கும் டெல்லி சி.பி.எஸ்.ஈ.யில படிச்சேன். அங்கே புத்தகத்துல இருக்கிற கேள்விகளைக் கேட்க மாட்டாங்க. இங்கே மாதிரி மனப்பாடம் செய்து மார்க் வாங்க முடியாது. ப்ளஸ் ஒன் படிக்க பாண்டிச்சேரி வந்தேன். என் கூட படிச்ச பொண்ணு பத்தாவதுல ஸ்டேட் ஃபர்ஸ்ட்டா வந்திருந்தாங்க. அப்போதான் நான் சவால் விட்டேன். 'உன்னால டென்த்ல ஸ்டேட் ஃபர்ஸ்ட் வர முடியும்னா என்னால ப்ளஸ் டூவுல இதை செஞ்சு காட்ட முடியும்'னு மனசுக்குள்ளே ஒரு சவால் உருவாச்சு. என் கனவுக்கு டீச்சர்ஸ், ஃப்ரெண்ட்ஸ் எல்லாரும் உதவினாங்க. கடைசியில எங்க ரெண்டு பேருக்கும் நடந்த போட்டியில ஜெயிச்சது நான்தான். இப்படிப் பொறாமை இல்லாத ஒரு போட்டி மனப்பான்மை இருக்கறது எல்லோருக்கும் அவசியம். அதுவே உங்களை இலக்கு நோக்கித் துரிதப்படுத்தும்."



**பிட்ஸ் பிலானி அனுபவம் எப்படி இருக்கு?**

"நான் படிச்சபோது நிறைய தமிழ் மாணவர்கள் இருந்தாங்க. அங்கே உள்ள ப்ரொஃபசர்கள்ல நிறையப் பேர் தமிழர்கள்தான். அறிவுஜீவிகள் படிக்கிற கல்லூரி. போட்டி கடுமையா இருக்கும். ஆனாலும் நான் ப்ளஸ் டூவுல எடுத்த மதிப்பெண்கள் எனக்குப் பெரிய பலமாவும், உத்வேகமும் கொடுத்துச்சு."

**- ச.ந.கண்ணன்**



# கல்கி



2007 பிப்ரவரி 18
விய மாசி 6
மலர் : 65
இதழ் : 29

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

## கிடைத்தாய், வாழி, காவிரி!

காவிரி நடுவர் மன்றம் நடுநிலை பிறழாமல் தீர்ப்பளித்திருப்பது கூர்ந்து கவனித்தால் புரியும். அதனால்தான் அதன் தீர்ப்பை தமிழக முதல்வர் வரவேற்றுப் பேசியிருக்கிறார்.

'ஆண்டுதோறும் தமிழகத்துக்கு 192 டி.எம்.சி. தண்ணீரை கர்நாடகா திறந்துவிட வேண்டும்; (உலகத்தரம் வாய்ந்த) பில்லிகுண்ட்லு நீர்த்தேக்க நிலையத்திலிருந்து இந்த அளவு கணக்கிடப்படும்' என்பது தீர்ப்பின் முக்கியமான அம்சம். இது தவிர, தமிழக காவிரிப் படுகையில் விழக்கூடிய மழைநீரின் அளவும் சேர்கிறபோது அது 419 டி.எம்.சி ஆகும்.

தமிழகம் கேட்ட 562 டி.எம்.சி.யைப் பார்க்க 419 மிகக் குறைவு என்று வாதாடி, இந்தத் தீர்ப்பு நமக்கு நீதி செய்யவில்லை என்று ஒரு தரப்பினர் கூறி வருகின்றனர். ஆனால் கர்நாடகா கேட்ட 465 டி.எம்.சி.யில் 270ஐத்தான் நடுவர் மன்றம் கிடைக்கச் செய்திருக்கிறது என்பதையும் நாம் கணக்கில் கொள்ள வேண்டும்.

காவிரி நீரைப் பகிர்ந்துகொள்ளும் நான்கு மாநிலங்களுக்குமே நீர்த் தேவை அதிகரித்துதான் வருகிறது என்கிறபோது, இருக்கிற நீரை எவ்வாறு வீணடிக்காமல் நியாயமாகப் பகிர்ந்து பாசனம் செய்யலாம் என்றுதான் பார்த்தாக வேண்டும். அதைச் சரியாகக் கணித்து, அனுபவபாத்யதையைக் கணக்கில் கொண்டு, பொறுப்புடன் தீர்ப்பளித்துள்ளது நடுவர் மன்றம்.

இனி, இத்தீர்ப்பின் வடிவத்தை ஆராய்ந்து, அரசியல் உள்நோக்கம் கற்பிக்காமல் அதை நடைமுறைப்படுத்துவதில் கண்ணும் கருத்துமாக இருப்பதுதான் அறிவுடைமை.

ஆனால், தமிழகத்தில் பா.ம.க., ம.தி.மு.க. தலைவர்கள்; நெடுமாறன் போன்றோர் இத்தீர்ப்பு ஏமாற்றம் அளிப்பதாகக்






கூற, கர்நாடக அமைச்சர்களும் இத்தீர்ப்பு தங்கள் மாநிலத்துக்கு நியாயம் வழங்கவில்லை என்று கூறுவது வேடிக்கைதான்! தீர்ப்பை அரசியல் சாயம் பூசிக் கொச்சைப்படுத்துவதும் மேல் முறையீடு செய்ய முற்படுவதும் ஆர்ப்பாட்டங்களைத் தூண்டுவதும் காவிரிப் பிரச்னையை மேலும் சிக்கலாக்கித் தீர்வுக்கே வழியின்றித்தான் செய்யும். ஏற்கெனவே இத்தீர்ப்பு வெளிவர பதினாறு ஆண்டுகள் ஆகியிருக்கின்றன! நடுவர் மன்றத்தின் பணிகள், இடைப்பட்ட காலத்தில் தோன்றிய குறுக்கீடுகள், இடையூறுகளால் தாமதப்பட்டுத்தான் போனது.

நீர்ப் பகிர்வுப் பிரச்னையை மொழிப் பிரச்னையாக, இனப் பிரச்னையாக மாற்றிப் புண்ணியம் கட்டிக் கொண்டனர் சில கர்நாடகா அரசியல் தலைவர்கள்.

இப்போது இத்தீர்ப்பையும் அதே மாதிரி அரசியலாக்க அவர்கள் முற்பட்டுள்ளனர். தமிழக அரசியல்வாதிகளாவது அந்த அணுகுமுறையைக் கைவிட்டு நடைமுறையை, யதார்த்தத்தைச் சந்திக்க மக்களுக்கு வழிகாட்ட வேண்டும். கர்நாடகா முதல்வரைக் கூட்டாகச் சந்தித்து, அமைதியாக இத்தீர்ப்பை ஏற்க தமிழகத் தலைவர்கள் ஒன்றுபட்டுக் குரல் கொடுக்க வேண்டும்.

மழை பொய்க்கும் ஆண்டுகளில் நடுவர் மன்றம் குறிப்பிட்ட அளவுகளின் விகிதாசாரத்திலேயே இருக்கிற மொத்த நீரும் பகிர்ந்து கொள்ளப்பட வேண்டும் என்பது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

நடுவர் மன்றத்தின் தீர்ப்பையும் ஆணைகளையும் செவ்வனே அமல்படுத்த, குறிப்பாக மழை குறைவாக உள்ள காலங்களில் பகிர்வு அளவுகளைத் தீர்மானிக்க, ஒரு தொழில்நுட்பக் குழுவை மத்திய அரசு நியமித்தல் நலம். காவிரி சம்பந்தப்படாத மாநிலங்களைச் சேர்ந்த உறுப்பினர்களைக் கொண்ட இக்குழுவின் உத்தரவுகளை கர்நாடகா அரசு நிறைவேற்றி வந்தால் எந்தவிதக் கசப்புணர்வுக்கும் இடமின்றிப் போகும்.

காவிரியிலிருந்து தமிழகம் பெறக்கூடிய நீரின் குறைந்தபட்ச அளவு என்ன என்பது தீர்மானமாகிவிட்டதால், இனி அந்தந்த ஆண்டு பெய்யக்கூடிய மழைக்கு ஏற்ப தஞ்சைப் பகுதி விவசாய நடைமுறைகளையும் பயிர் - பாசன முறைகளையும் திட்டமிட இயலும்; விவசாயிகளுக்கு விளக்கிக் கூறவும் முடியும். தமிழக அரசின் விவசாயத் துறையும் அமைச்சரும் இதில் சிறப்புக் கவனம் செலுத்தட்டும். ●



**18**

ஒவ்வொரு சமயத்தாரும் கடவுள் அப்படியிருப்பார், இப்படியிருப்பார், அவருக்கு இன்ன இன்ன குணங்கள் என்று விவரிக்கின்றனர். 'எங்கள் கடவுள்தான் நிஜமான கடவுள் மற்றதெல்லாம் பொய்' என்றும் சில மதங்கள் கூறுகின்றன. சிலர் 'கடவுள் இல்லை' என்று சொல்லி விக்ரகங்களை உடைக்கிறார்கள். இந்துக்கள் தம் கோயில்களில் கடவுளைப் பல வடிவங்களில் விக்ரகங்களாக வழிபடுகின்றனர். இது பிற சமயத்தவருக்கு வியப்பாக இருக்கும். சித்தர்கள்கூட இதை கேலி செய்திருக்கிறார்கள்.

இறைவனின் விக்ரக வடிவை 'அர்ச்சாவதாரம்' என்று சொல்வார்கள். இது என்னவென்பதை ஆச்சார்ய ஹ்ருதயம் என்னும் நூல்

# யானையும் யாவும்!

விளக்குகிறது. பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம் என்னும் நான்கு நிலைகளில் உள்ள குணங்களையும் அர்ச்சாவதாரத்தில் காணலாம் என்று சொல்கிறது. தமிழில் சொன்னால் பரமபதத்தில் இருப்பது (பரத்துவம்), பாற்கடல் சூழ்ந்திருப்பது (வியூகம்), அவதார வடிவங்களில் இருப்பது (விபவம்),

**சுஜாதா**

எங்கும் ஊடுருவியிருப்பது (அந்தர்யாமித்துவம்) இவை அனைத்தையும் ஒரு விக்ரகத்தின் மூலம் காணலாம் என்கிறது.

எளிய மனங்களுக்கு உயர்ந்த தத்துவங்கள் புரியாது. ஆனால் ஓர் அழகான விக்ரகத்தை கடவுளின் பிரதிநிதியாக, ஒரு பாவனையாக ஏற்பதில் கஷ்டம் இருக்காது. இருந்தும் பகவான் விக்ரகங்களுக்கு அப்பாற்பட்டவர் என்பதை மறக்கக் கூடாது. அவனை அடைய வேண்டும் என்றால் வடிவங்களுக்கு அப்பால் சிந்திக்க வேண்டும்.

*'யாவையும் யவரும் தானாய்*
*அவரவர் சமயம் தோறும்*
*தோய்விலன் புலன் ஐந்துக்கும்*
*சொலப்படான் உணர்வின் மூர்த்தி*
*ஆவிசேர் உயிரின் உள்ளால்*
*ஆதுமோர் பற்றிலாத*
*பாவனை அதனைக் கூடில்*
*அவனையும் கூடலாமே'*

எல்லாமும் அவன்தான்! எல்லாரும் அவன். அவரவர் மதங்களால் பாதிப்பு இல்லாதவன் (தோய்விலன்). ஐந்து புலன்களுக்கும் சொல்ல முடியாமல் உணர்வின் வடிவமாய் உயிரின் உள்ளே போய் யோசித்தால், பற்று எதுவும் இல்லாத ஒரு பாவனையை எட்டிப் பிடிக்க முடிந்தால், அவனைத் தொட்டுப் பார்க்க முடியும்.

திருவாய்மொழியில் நம்மாழ்வார் யோசித்த அளவுக்கு நம்மால் யோசிக்க இயலாது. அதனால் முமுட்க்ஷுப்படி என்னும் வைணவ நூலில் சொன்னபடி விக்ரகங்கள்தான் 'பர வியூக விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்'. விக்ரங்களை உடைக்கக் கூடாது.

**(படிக்கலாம்)**

# இது சுண்டல் தின்னும் பருவம்!

பிப்ரவரி 14. மெரீனா கடற்கரையில் படகு போன்று வடிவமைக்கப்பட்டிருந்த மேடையின் முன்பு இளம் ஜோடிகளின் கூட்டம் நிரம்பி வழிந்தது. ஒரு பக்கம் பல்லு போன கிழவர்கள் முதல் மீசை முளைக்காத பையன்கள் வரை வரிசையாக நின்றிருந்தனர். மேடையின் நெற்றியில் துணி பேனர். அதில் 'சென்னைக் கடற்கரை சுண்டல் விற்பனையாளர் சங்கம் - 2007' என்ற வாசகங்கள்.

சங்கத் தலைவர் சவுரிமுத்து மேடையேறி மைக்கைப் பிடித்தார். "அன்பார்ந்த சுண்டல் விற்கும் சகோதரர்களே, எங்கள வாழ வைக்கும் காதலர்களே... ஒவ்வொரு வருஷமும் நம்ம சங்கம் சார்பா சிறந்த காதலர்கள் விருது தர்றது அல்லாருக்கும் தெரிஞ்சது தான். அப்படிதான் இந்த வருஷத்து விருதைக் குடுக்கறதுக்கு இங்கே கூடி கிறோம்.

இப்டி ஒரு ஐடியா எப்டி வந்திச்சின்னு ஒவ்வொரு தபாவும் சொல்லிக்கினுதான் கிறேன். பீச்ல ஐஸ்கிரீம், பஜ்ஜி, பேல்பூரின்னு எவ்வளவோ இருந்தாலும் சுண்டலோட ரேஞ்சே வேற. சுண்டலும் லவ்வருங்களும் அரசியல்வாதியும் ஊழலும் மாதிரி. ஆனா, இன்னா பிராப்ளம்னா மொதல் ரெண்டு நாளைக்குத் துட்டு குடுத்து வாங்கறவங்க, மூணாவது நான் கடன் சொல்றாங்க. சரி, பழகிட்டோமேன்னு குடுத்தா, டெய்லி கடன் கேட்கறாங்க. சில பசங்க சுண்டலையும் துன்னுட்டு, 'என் ஆளுக்கு மல்லிப்பூ வாங்கித் தரணும், அஞ்சு ரூபா இருந்தா குடு... அப்பால தந்துடறேன்'னு சொல்றாங்க. எங்க போய் அடிச்சுக்கறது?"

"அதான், இந்த பிராப்ளத்த எப்டி சால்வ் பண்றதுன்னு கூடிப் பேசினோம். அப்பத்தான் இந்த ஐடியா வந்திச்சு. ஒரு வருஷம் ஃபுல்லா கடன் சொல்லாம துட்டுக் குடுத்து நெறைய சுண்டலை எந்த ஜோடி துன்னுதோ, அவங்களுக்குப் பரிசு தர்றதுன்னு முடிவு பண்ணினோம். இதுக்காக அல்லா ஜோடிக்கும் ஒரு அட்டையக் குடுத்தோம். அவுங்க எவ்வளவுக்குத் துன்றாங்கன்னு எழுதினோம். ஒரு வருஷமானதும் அதை கலக்ட் பண்ணி, சரிபார்த்து பரிசு தர ஆரம்பிச்சோம். இந்த வருஷம் அதிகமா சுண்டலைத் துன்ன ஜோடி யாருன்னு நம்ம சங்கத்தின் பொருளாளர் பொன்னுசாமி அறிவிப்பார். நன்றி, வணக்கம்."

பொன்னுசாமி கையில் அட்டையுடன் மைக்கை நெருங்கினார். "இந்த வருஷத்து சிறந்த காதலர்கள் மதன் - ஷர்மிளா. இவுங்களுக்குப் பரிசை போன வருஷத்து சிறந்த காதலர்கள் தாமு-ராதா அளிப்பார்கள்" என்றார்.

மதனும் ஷர்மிளாவும் பூரிப்புடன் மேடையில் வந்து நின்றார்கள். அவர்களுக்குப் பரிசைக் கொடுப்பதற்கு இரண்டு ஜோடிகள் மேடைக்கு வந்தன.

"என்ன இது, தாமு-ராதான்னு ஒரு ஜோடியைத்தானே அறிவிச்சாங்க. ரெண்டு ஜோடி போறாங்க?" என்று ஒருவர் கேட்டார்.

"அது ஒண்ணுமில்லே. போன வருஷம் வரைக்கும் காதலர்களா இருந்த தாமுவும் ராதாவும் இப்ப ஜோடியை மாத்திட்டாங்க. அதான் அவங்கவங்க ஜோடியோடு வந்திருக்காங்க" என்றார் அடுத்தவர்.



பரிசு கொடுக்கப்பட்டது. கேமரா மின்னியது. ஓர் ஒடிசலான ஆசாமி பேப்பர், பேனாவுடன் அவர்களை நெருங்கினான். "வாழ்த்துகள் மதன் – ஷர்மிளா. என் பேரு அரைக் கிறுக்கன். 'வெட்டி வேலை' பத்திரிகையில இருந்து வரேன். இந்தப் பரிசை வாங்கினதைப் பத்தி என்ன நினைக்கறீங்க?" என்று கேட்டான்.

"இந்தப் பரிசு வாங்க முழுக் காரணம் இவதான். ஒவ்வொரு முறையும் பீச்சுக்கு வரும்போது இவ ஒருத்தியே பத்து பாக்கெட் சுண்டலை முழுங்குவா. 'மாசக் கடைசில காசு இல்லே'ன்னு சொன்னாலும் விட மாட்டா. சட்டுன்னு என் கையில இருக்கிற வாட்சைக் கழட்டி 'ஐந்நூறு ரூபா வாட்ச் ஐம்பது ரூபா; 'ஐந்நூறு ரூபா வாட்ச் ஐம்பது ரூபா'ன்னு கூவி வித்துக் காசாக்கிடுவா. நான்கூட பல தடவை கோவிச்சுக் கிட்டேன். ஆனா இப்ப இந்தப் பரிசை வாங்கினதும் ரொம்ப சந்தோஷமா இருக்கு" என்றான் மதன்.

"நீங்க ஏதாவது சொல்லுங்க ஷர்மிளா?" என்று நோண்டினான் அரைக் கிறுக்கன்.

"என்ன சொல்றது? இந்தப் பரிசு எங்களுக்குக் கிடைக்குமான்னு சந்தேகமாகவே இருந்திச்சி. ஏன்னா எங்களுக்குப் போட்டியா இன்னொரு ஜோடி. தினம் பத்து பாக்கெட், இருபது பாக்கெட்னு வாங்கிக் கொட்டிப்பாங்க. அவங்கதான் ஜெயிப்பாங்கன்னு நினைச்சேன். போன மாசம் ரெண்டு பேருக்கும் வயிறு சரியில்லாமல் போய், ஆஸ்பத்திரியில இருந்தாங்க. அந்தச் சமயத்துல நாங்க முந்திட்டோம்" என்று பெருமையுடன் சொன்னான் ஷர்மிளா.

- குகும்புராஜ்

6

# கோர்ன் ஃப்ரெண்ட்டும் நானும்...

**நா**ன் நடித்த 'ஆசை ஆசையாய்' படம் வெளிவரும் முன்பே, இன்னும் ஒரு படத்தில் நடிக்கிற வாய்ப்பு எனக்கு வந்து விட்டது. படத்தின் பெயர் 'தித்திக்குதே'. அதுவும் சூப்பர் குட் ஃபிலிம்ஸ் தயாரிப்பு தான். படத்தின் இயக்குநர் பிருந்தா சாரதி. ரன், சண்டைக் கோழி போன்ற வெற்றிப் படங்களை இயக்கிய லிங்கு சாமியிடம் பணியாற்றியவர். சுறுசுறுப்பான இளைஞர். 'தித்திக்குதே' படத்தை இயக்கும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்த போது, படத்தில் கதாநாயகனாக நடிக்க என்னை அழைத்தார். நானும் ஒப்புக் கொண்டேன். சூப்பர் குட் மூலம் அறிமுகமான கேமராமேன் ஆர்தர் வில்சன் தான் இந்தப் படத்துக்கும் கேமராமேன். இசை, வித்யாசாகர்.

படத்தின் பாடல் காட்சி ஒன்றை ஏதாவது ஒரு அயல்நாட்டுக்குச் சென்று படம் பிடிக்க விரும்புவதாக இயக்குநர் சொன்னபோது, எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. அதன்பின் சில நாட்களில் பாடல் காட்சிக்காக சுவிட்சர்லாந்து போகப் போவதாக தெரிந்ததும், என் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. சுவிட்சர்லாந்தில் நடந்த படப்பிடிப்பு வித்தியாசமான ஒரு அனுபவத்தை எனக்கு அளித்தது.

நாங்கள் போனபோது, அங்கே கடுமையான குளிர். என்னதான் கம்பளி உடைகள் அணிந்திருந்தாலும், அந்த அளவு குளிர் நம்மைப் போன்றவர்களுக்குப் பழக்கமில்லாதது என்பதால், மிகவும் கஷ்டப்பட்டேன். ஆனாலும் அது புது அனுபவமாக, ரொம்ப 'த்ரில்'லிங்காக இருந்தது.

ஆக்ஷன் ஸ்டார் ஜீவா



அங்கிருந்த ஷாப்பிங் மால்கள் மனதை அசத்தின. ஏராளமான பொருட்களை வாங்கினேன். டி.வி.டிக்கள் விற்கும் ஒரு கடைக்குப் போனேன். அப்பப்பா! ஆயிரக்கணக்கான, உலகின் பல்வேறு மொழிப் படங்களின் டி.வி.டிக்கள், மியூசிக் ஆல்பங்கள் விற்பனைக்கு இருந்தன. நிறைய வாங்கிக் குவித்தேன். விதவிதமான பேனாக்களையும் கடிகாரங்களையும் வாங்கினேன். அங்கு நான் இருந்த ஆறு நாட்களும், ஆறு நிமிடங்களைப் போல் ஓடின. நான் 'தித்திக்குதே' படத்துக்காக அங்கே சென்றபோது அதற்கு முன்பே, 'ஆசை ஆசையாய்' படம் ரிலீஸாகி இருந்ததால் அங்கிருந்த பல ஈழத்தமிழர்கள் என்னை அடையாளம் தெரிந்துகொண்டு என்னிடம் வந்து பேசினார்கள். சினிமாவின், வீச்சையும், முழுப் பரிமாணத்தையும் அப்போதுதான் நான் புரிந்து கொண்டேன்.

ஸ்விட்சர்லாந்திலிருந்து திரும்பி வரும்போது சில நாட்கள் துபாயில் தங்கினேன். அங்கேயும் ஆசையாக ஷாப்பிங் செய்தேன். பல கடைகளுக்குச் சென்று நிறைய பொருட்களை வாங்கி நிரப்பினேன். ஊருக்குப் புறப்படுவதற்கு முந்தைய நாள், எதற்காகவோ பாஸ்போர்ட் தேவைப்பட்டது. தேடிப் பார்த்தால் காணோம். டென்ஷனாகிவிட்டேன். ஷாப்பிங் போன தினம் அதைக் கையோடு எடுத்துச் சென்றது நினைவுக்கு வந்தது. எங்கேயாவது பாஸ்போர்ட்டை வெளியில் எடுத்தேனா என்று யோசித்தேன். ஒரு கடையில் வெளியில் எடுத்தது நினைவுக்கு வந்தது. உடனே, அங்கே ஓடினேன். விஷயத்தைச் சொன்னேன். கடையின் எந்தெந்த பிரிவுக்கெல்லாம் சென்று ஐட்டங்கள் வாங்கினேனோ, அங்கே எல்லாம் போய்த் தேடினேன். ஒரு இடத்தில், கவரில் போட்டு வைத்திருந்த என் பாஸ்போர்ட், அப்படியே இருந்தது. கடைக்காரருக்கு நன்றி சொல்லிவிட்டு நிம்மதிப் பெருமூச்சு விட்டேன்.

நான் இரண்டு மூன்று வயதாக இருந்தபோது துபாயில் வளர்ந்தேன் என்று என் அம்மா சொல்லித்தான், பிறகு எனக்குத் தெரியும். எனக்கு ஞாபகமில்லை. அங்கே என் அப்பா, திரைப்படங்கள் இறக்குமதி, ஏற்றுமதி பிசினஸ் செய்து வந்தார் என்றும், என் அம்மா, அழகு நிலையம் ஒன்றை நடத்தி வந்தார் என்றும் சொல்லக் கேட்டிருக்கிறேன். அங்கே பள்ளிக் கூடத்தில் ஒரு வருடம் நான் படித்தேனாம். ஸ்கூலில் எங்களை இஷ்டத்துக்கு விளையாட விட்டுவிடுவார்கள். எங்கள் குடும்பம்



துபாயிலிருந்து இந்தியாவுக்கு வந்து, சென்னை, சைதாப்பேட்டையில் குடியேறியது.

ஒரு நாள் தெருவில் எல்லாப் பசங்களும் சேர்ந்து கண்ணாமூச்சு விளையாடிக் கொண்டிருந்தபோது, நான் எங்கேயோ வழி தவறிப் போய்விட்டேன். ஒன்றும் புரியாமல், நடுத்தெருவில் நான் பாட்டுக்கு அழுது கொண்டிருந்தேன். வீட்டில் என்னைக் காணாமல் பல இடங்களிலும் தேடிப் பார்க்கத் தொடங்கிவிட்டார்கள். கடைசியில், ஒரு பூக்காரப் பெண்மணி என்னை அடையாளம் தெரிந்துகொண்டு என் வீட்டுக்கு அழைத்து வந்தார்.

ஒரு முறை தேனீயில் உள்ள உறவினர் வீட்டுக்குப் போயிருந்தபோது சினிமாவுக்குப் போனோம். அங்கும் தொலைந்து போய்விட்டேன். யாரோ தெரிந்தவர்கள்தான் என்னை மீண்டும் வீட்டில் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

சென்னை கீழ்ப்பாக்கத்தில் சிதா கிங்ஸ்டன் பள்ளியில் என்னைச் சேர்த்துப் பள்ளிக்கூடத்துக்குச் சென்ற முதல் சில தினங்களில், என் மனத்தில் ஒரு பெரிய கேள்வி எழுந்தது. பெற்றோர்கள் பள்ளிக்கூடத்தில் கொண்டுவந்து விட்டுவிட்டுப் போகிறபோது குழந்தைகள் எதற்காக அழுகிறார்கள்? ஆரம்பம் முதலே எனக்குப் பள்ளிக்கூடம் என்பது மகிழ்ச்சியான இடம்தான்.

ஸ்கூல் போக ஆரம்பித்த ஒரு சில நாட்களிலேயே, எனக்கு ஒரு கேர்ள் ஃப்ரெண்ட் கிடைத்துவிட்டாள். பெயர் ஜெயஸ்ரீ. வகுப்பில் அவளும், நானும் பக்கத்துப் பக்கத்து சீட். என்னுடைய இன்னொரு க்ளோஸ் ஃப்ரெண்ட் பிரேம். தினமும் எனக்கு முன்பு பள்ளிக்கூடத்துக்கு வந்து, வாசலில் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பான். நான் தூரத்தில் நடந்து வருவதைப் பார்த்துவிட்டால் போதும், உடனே என்னை நோக்கி ஓடி வருவான். 'நான் உனக்கு ஹெல்ப் பண்றேன்' என்று சொல்லி என் லஞ்ச் பேக்கை வாங்கிக்கொள்வான்.

அந்தப் பள்ளிக்கூடத்தில் எனக்கு மிகவும் பிடித்த ஒரு விஷயம், அங்கே நிறைய கார்ட்டூன் கேசட்டுகளை வீடியோவில் போடுவார்கள். நான் வீட்டிலிருந்து யாருக்கும் தெரியாமல்



## "நாய்க் குட்டியால் அடி வாங்கிய கதை தெரியுமா?"

அவ்வப்போது சில கார்ட்டூன் கேசட்டுகளை பள்ளிக்கு எடுத்துக் கொண்டு போய், டீச்சர்களிடம் கொடுத்துப் போடச் சொல்வேன். ஒருநாள் வகுப்பறைக்குள் சின்னஞ் சிறு நாய்க்குட்டி ஒன்று வந்துவிட, அதை வைத்துக் கொண்டு வகுப்பில் எல்லாப் பசங்களும் விளையாடியது, அதற்காக டீச்சரிடம் அடி வாங்கியது, ஒரு முறை பள்ளிக்கூட நாடகத்தில் வசனம் எதுவும் பேசாமல், படை வீரனாக மேடையில் ஓரமாக நின்றது என்று சந்தோஷமாக இருந்த காலங்கள் அவை. ஆனால், அந்த சந்தோஷம் நீடிக்கவில்லை.

*(பேசுவேன்)*

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

# ஒரு பக்கக் கதை



"முதலாளி... எனக்கு இந்த மாசமாவது சம்பளத்தை ஏத்திக் கொடுத்தீங்கன்னா ரொம்ப நல்லாயிருக்கும். கஷ்டமாயிருக்கு முதலாளி!"- மறுபடியும் மாணிக்கம் ராகம் பாட ஆரம்பித்தான்.

மளிகைக் கடை முதலாளி ராஜேந்திரன், "சரி சரி பார்ப்போம்..." என்று சொல்லி விட்டு யோசிக்கலானார். 'மாணிக்கம் சம்பளத்தை ஏற்றச் சொல்வது மூன்றாவது தடவை. இரண்டு வருடத்தில் அடிக்கடி இப்படிக் கேட்கிறான். இனிமேல் இவன் சரிப்பட மாட்டான் போலிருக்கிறது. வேறு நல்ல ஆள் கிடைக்கும் வரை, இவனை வைத்துக் கொள்ளலாம்' என முடிவெடுத்தார்.

"இந்தா பாரு மாணிக்கம், இந்த மாசத்திலேர்ந்து உனக்கு இருநூற்றைம்பது ரூபாய் ஏத்திடறேன். மறுபடி தொந்தரவு பண்ணாம இரு" எனச் சொல்லிவிட்டு நகர்ந்தார்.

வியாபாரம் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. 'சாப்பிட்டு வருவோம். அப்படியே மனைவியிடமும் வேறு ஆளைப் பார்த்து வைக்கச் சொல்வோம்' என நினைத்தபடியே கடையைச் சாத்திவிட்டுக் கிளம்பினார் ராஜேந்திரன்.

வழியில் சாப்பிடச் சென்ற மாணிக்கம் யாரிடமோ பேசுவது கேட்டது.

"என்ன மாணிக்கம்... தனியார் கம்பெனியில வேலை வாங்கித் தரேன்...



# மனசு!

மெட்ராஸ் போங்கறேன்... மாட்டேங்கறியே...?"

"இல்லைங்க... இத்தனை வருஷமா இந்தக் கடையிலதான் வேலை செய்யறேன். இப்பக்கூட கேட்டவுடனே முதலாளி சம்பளத்தை ஏத்தறாரு. இதைவிட சம்பளம் அதிகமுன்னு நான் போயிட்டா முதலாளி பாவமில்லையா...? அவர் ஒண்டியா எப்படிச் சமாளிப்பாரு? சம்பளம் கம்மின்னாலும் பரவாயில்லை. இப்படி அம்போன்னு விட்டுட்டுப் போக என் மனசு சம்மதிக்காதுங்க" என்று சொன்ன மாணிக்கத்தைப் பார்த்து வெட்கித் தலை குனிந்தார் முதலாளி. ●

கிரிகா

- எனது கண்களால்தான்
நீ மேலும் மேலும்
அழகாகிக்கொண்டே போகிறாய்
என்றேன்

வெட்கத்தோடே
மறுத்துவிட்டு
உனது கண்களுக்காகத்தான்
மேலும் மேலும்
அழகாகிக்கொண்டே போகிறேன்
என்றாய்

- எங்கிருந்தோ நழுவி
பூமியில் விழுந்து
இரண்டு துண்டுகளாய் உடைந்த
ஒற்றை உயிர் நாம்
காலம்
எப்படியும் நம்மை
ஒட்டவைத்து விடுமென்ற
நம்பிக்கையில்தான்
காத்திருக்கிறேன்

- வெயிலுக்கும் குடை பிடிக்கிறாய்
மழைக்கும் குடை பிடிக்கிறாய்
உன் மனசு புரியாத மயக்கத்தில்
இன்று
வெயிலோடு பெய்கிறது மழை

- இதயம்
கொஞ்சம் கொஞ்சமாய்
உருகி வழிந்து ஆவியாகிக் கொண்டேயிருந்தது
பயந்துபோய்
உடனே உன்னைத் தொலைபேசியில்
தொடர்பு கொண்டேன்
எதிர்முனையில்
நீ அழுதுகொண்டிருந்தாய்
எதற்கோ

குகை மா.புகழேந்தி

# உனது கண்களுக்காக...

பகற்பொழுதில்
நீ பரிசளிக்கும்
பார்வைகளால்
எனது இரவுகளை
ஒளியேற்றுகிறேன்

அதிகமாய்க் குளிரும்
தருணங்களில்
உனது கோபத்தால்
கனல் மூட்டிக் கொள்கிறேன்

தனிமை பயமுறுத்தும்பொழுது
உனது நினைவுகளின்
கருவறைக்குள்
ஒரு குழந்தைபோல
சுருண்டு படுக்கிறேன்

ஏக்கம் ஆட்கொள்ளும்போது
உனது வெப்பம் குடித்த
உடைகளைத் தொட்டிலாக்கி
அதில் தூங்கச் செய்கிறேன்

காதல் திமிறிக்கொண்டு
வெளியேறும் சமயம்
உனக்குத் தெரியாமல்
உன் மரணத்தைத் திருடி வந்து
எனது வாழ்க்கைக்குள்
செருகி வைக்கிறேன்



'காதல்' 'காதல்' என்று சொல்கிறார்களே, அது என்ன? 'கண்டதும் காதல்', 'கேட்டதும் காதல்', 'முகர்ந்ததும் காதல்' என்றெல்லாம் படிக்கிறோமே, அவற்றின் தன்மை யாது?

'காதல் தெய்வீகமானது' என்று சொல்வோர் இருக்கிறார்கள். கவிகளும் பிறரும் அதைப் போற்றிப் புகழ்ந்திருக்கிறார்கள்.

காதல் தெய்வீகமாயிருக்கலாம். ஆனால் தெய்வத்தின் சித்தம் நமக்கெல்லாம் எவ்வளவு மர்மமாயிருக்கிறதோ, அவ்வளவு மர்மமாகவேயிருக்கிறது இந்தக் காதல் விஷயமும். அது பாட்டுக்குச் சொல்லாமல் வந்து சிலரைப் பிடித்துக் கொள்கிறது. அப்புறம் சொல்லிக்கொள்ளாமலே போய்விடுகிறது. யாரையும் கேட்டுக்கொண்டு வருவதுமில்லை; கேட்டுக்கொண்டு போவதுமில்லை.

'காதல் காதல் காதல் - காதல் போயிற் காதல் போயிற் சாதல் சாதல் சாதல்' என்கிறார் கவி. சாதலாவது, மண்ணாங்கட்டியாவது? பைத்தியந்தான்.

'காதல் காதல் காதல் - காதற் போயிற் காதல் போயிற் பிரிதல் பிரிதல் பிரிதல்' என்பது சந்தத்துக்குப் பொருத்தமில்லாவிட்டாலும், உண்மைக்குப் பொருத்தமென்று தோன்றுகிறது.

நமது நாட்டின் விவாக முறையைக் குறை சொல்வோர் பலர் இருக்கிறார்கள். அவர்கள் நமது விவாக முறை 'கட்டாய மணம்' என்றும், 'காதல் மணம்' அல்லவென்றும் கூறுகின்றனர்.

நமது விவாக முறையின் பேரில் எனக்கும் அநேக குறைகள் இருக்கின்றன. அவற்றை என்றாவது ஒரு நாள் உங்களிடம் முறையிட்டுக் கொள்கிறேன். ஆனால் இந்தக் 'காதல் மண'மும் அதற்குப் பாட்டனாகவே இருப்பதாய்த் தோன்றுகிறது.

கமலா தேவி - ஹரீந்திரநாத் மணத்தை விடச் சிறந்த 'காதல் மணம்' வேறு இருக்க முடியாது. கமலாதேவி குயின் மேரிஸ் கலாசாலையில் படித்துக்கொண்டிருந்த போது, முதல் கணவனை இழந்து கைம் பெண்ணானாள். பிறகு ஹரீந்திர நாத்தைச் சந்தித்தாள். இருவரும் காதல் கொண்டனர்; கல்யாணம் நடந்தது.

இரண்டுபேரும் வயது வந்தவர்கள்; உலகமறிந்தவர்கள்; அறிவில் மிகுந்தவர்கள். ஒத்த வயது; ஒத்த மேதைமை; ஒத்த சௌந்தரியம். காதல் தெய்வத்தின் அருளைப் பெறுவதற்கு எல்லா வகையிலும் பாத்திரமானவர்கள்.

ஆயினும் அவர்களுடைய இல்வாழ்க்கை இந்தக் கதியை அடைந்தது!

மற்றொரு பக்கத்தில், பெற்றோர் பார்த்து மணம் புரிவித்த தம்பதிகளின் இல்வாழ்க்கையைப் பாருங்கள். நான் அறிந்த அத்தகைய குடும்பங்



## அமரர் கல்கி



# காதலின் ரகசியம்!

களில் 100க்கு 70 தம்பதிகள் கூடிய வரையில் சந்தோஷமான வாழ்க்கையே நடத்துகிறார்கள்.

கல்யாணமாகி 25 வருஷங்களுக்கு மேலாகியும் நேற்றுதான் முதன் முதலாகச் சந்தித்துக் 'கண்டதும் காதல்' கொண்டவர்களைப் போல் அன்னியோன்யமாய் வாழும் தம்பதிகளை நான் அறிவேன். ஆயினும் இவர்களுடைய கல்யாணம் குழந்தைப் பருவத்தில் பெற்றோர்களால் முடித்து வைக்கப்பட்டதுதான்.

ஆகவே, உங்களை மறுபடியும் கேட்கிறேன். இந்தக் காதலின் இரகசியம் என்ன? எது உண்மைக் காதல்? எது பொய்க் காதல்? அது எப்படி வருகிறது? எப்படிப் போகிறது? அதனால் மனித வாழ்க்கையில் ஏற்படுவது இன்பமா? துன்பமா?

'காதல் மயக்கம்' என்று சொல்கிறார்கள். உண்மையில், இந்தக் காதல் விஷயத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்யப் புகுந்தாலே மயக்கந்தான் உண்டாகிறது.

- 'பெண் தெய்வங்கள்',
வானதி வெளியீடு

**தொ**ல்லை தரும் தொலைக் காட்சித் தொடர்கள் குறித்த அட்ட வணையை வெளி யிட்டு, வாசகர் களின் கருத்துக் களையும் வர வேற்றிருந்தோம். வந்து குவிந்த குமுறல்களில் சில இங்கே பார்வைக்கு...



**ரே**ட்டிங்கில் முன்னிற்க வேண்டும் என்பதற்காக சீரியல்களில் கலாசார சீரழிவுக் காட்சிகளை வைக்கக் கூடாது.

மாலை நேரத்தில், வீட்டில் விளக் கேற்றி வைத்துவிட்டு சோகம் பொங்கப் பொங்க சீரியல் பார்த்தால் வீடு என்னா கும் என்று அவர்களே முடிவு பண்ணிக் கொள்ளட்டும்.

**- ஏ.வி.சண்முகம்,**
**கன்னியாகுமரி**

**எ**ந்தத் தொடரும் முன்னேறிக் கொண்டிருக்கும் பெண்களை மீண்டும் அடிமையாக்கவே வழிவகை செய்கிறது.

கொலை, ரத்தம், பழிவாங்குதல் என வன்முறைக் காட்சிகள் வேறு.

அன்பை, அறிவை, பெண்களின் பிரச் னைகளை ஆரோக்கியமாக அலசும் தொடர்களைக் காண்போமா என்பதே என் ஆவல்.

**- வி.ஆர். ராதாகிருஷ்ணன்,**
**தஞ்சாவூர்**

# "நாங்கள் அழத்

**சீ**ரியல்களிடமிருந்து பெண்களுக் கும், சோகத்திலிருந்து சீரியலுக்கும் விடுதலை கிடைப்பது மிக மிக முக்கியம். பெண்கள் யாரும் டீ.வி.யைப் போட்டுக் கொண்டு அழத் தயாராயில்லை. சந் தோஷமான, சுவையான, கண்ணியமான காட்சிகளைப் பார்த்து ரசிக்கவே விரும்பு கிறோம்.

'கோலங்க'ளில் அபி கடனிலும், கஷ் டத்திலும் இருக்கிறாள். வீட்டில் மூன்று பெண்களுமே வாழாமல் இருக்கிறார்கள். ஆனாலும் அபி பொறுமையாக இருக் கிறாளாம். அது பொறுமை இல்லை; பேதமை.

ஐம்பது, அறுபது பேர் நடிக்கும் 'சொர்க்கம்' பல வருட இழுவை. பள்ளி மாணவர்களைப் பகடைக்காய்களாக்கி சதுரங்கம் நடத்துகிறது 'கனாக் காணும் காலங்கள்'.

**- லெஷ்மி பத்மநாபன்,**
**சென்னை - 40**

**'அ**பிராமி' எனும் ஒரு பெண் பாத்திரம், குறிப்பிட்ட தொடரில் வரும் அத்தனை பெண் களுக்கும் எதிரி. பிடித்த முயலுக்கு





மூன்று கால் என்று பிடிவாதமுள்ள கேரக்டர். இது மாதிரி கதையம்சங்கள் எத்தனை நாள் ஜெயிக்கும்?

**- எஸ். விஜயலக்ஷ்மி,**
**சென்னை - 88**

**க**ர்ச்சிப் போதாது. இனி போர்வை



# தயாரில்லை!"

தான் வேண்டும் - கண்றாவிகளைப் பார்த்துக் கண் துடைக்க...

**- லட்சுமி சீனிவாசன்,**
**சென்னை - 24**

**வ**ன்முறையை நியாயப்படுத்துவது, ஆள் கடத்தல், அடியாட்களை ஏவிக் கொலை செய்தல், பெண்ணை மானபங்கப்படுத்துவது, அரசியல் குற்றங்களைக் காட்டுவது, தனி மனித ஏகபோக உரிமைகளைக் காட்சிகளாக்குவது... இப்படிப் பார்ப்பவர்களை- குறிப்பாக, இளைஞர்களின் மனதைக் கெடுப்பதும், அவற்றை 'டி.ஆர்.பி'யில் முதலிடம் என்று விளம்பரம் செய்து மகிழ்வதும்... என்று மாறும் இந்த நிலைமை?

**- து.க.வேணுகோபால்,**
**சென்னை - 92**

**சீ**ரியல் பார்ப்பவர்கள், அதில் ஆழ்ந்து போகிறவர்கள் மற்ற கவலை இல்லாதவர்கள். அன்றாடம் உழைக்கும், உழைப்பில் நம்பிக்கை வைக்கும் யாரும்- குடும்பச் சூழலில் எதிர் நீச்சல் போடும் யாரும் சீரியலைப் பற்றிய சிந்தனைக்கே இடம் கொடுப்பதில்லை.

எல்லா தொடர்களிலும் அழுகை எனக் காட்டப்படுவது சிரிப்பைத்தான் வரவழைக்கின்றது. நிஜ வாழ்க்கையில் டி.வி.யில் காட்டும் அளவுக்கு யாரும் அவ்வளவு கொடுமையானவர்கள் கிடையாது. மிகைப்படுத்தப்படும் எல்லா விஷயங்களையும் தரும் சீரியல்கள் சலிப்பையே தருகின்றன.

**- எஸ். சந்திரா, புலியூர் சிக்கல்**



சிவாஜி - சாவித்ரி நடித்த 'பாசமலர்' படத்தில் 'ஒன்றுமேயில்லை' என்று சொல்லுமளவுக்கு 'நிம்மதி'யில் மிகைப் படுத்திக் காட்டுகிறார்கள். சீக்கிரம் முடிந்துவிடும் என்று நம்புவோம்!

அடுத்து 'கல்கி'. கல்கி அவதாரம் வரும் முன் முடித்துவிடுவார்களா? பூஜாவின் பாத்திரமும், நடிப்பும் இம்சை. கோபி திரையில் வந்தாலே டி.வி.யை மூட வேண்டும் போல் இருக்கிறது. ஏகப்பட்ட கதாபாத்திரங்களை உலவவிட்டு எப்படிக் கதையை முடிக்கப் போகிறார்கள் என்று தானும் குழம்பி, நம்மையும் வெறுப் பேற்றி...

'சொர்க்கம்' கதைக்குச் சம்பந்தமே இல்லாத, வேண்டாத பாத்திரங்கள். இதன் இயக்குநர் இன்னும் நான்கு மாதங்களில் முடிந்துவிடும் என்று சொன் னார். அவர் சொன்னது இரண்டு ஆண்டு களுக்கு முன்பு. இவற்றிலிருந்தெல்லாம் எப்போது விடுதலை?

- ஆர்.நிர்மலா,
சென்னை

பெண்களின் கதை, குடும்பக் கதை- இந்த இரண்டைத் தவிர வேறெந்த புதுக் கதைக் கருவையும் கைக்கொள்ளாதது...

கதையை எழுதி, இயக்காமல் 'கதையைப் பண்ணி' இயக்குதல்...

இயக்குவதில் திறமையின்மை...

இழுத்தடித்தல்...

இவையே சீரியல் சீரழிவுக்குக் காரணம்.

- இ.பு.ஞானப்பிரகாசன்,
சென்னை - 91

நல்ல கதையம்சம், நல்ல மெசேஜ், நகைச்சுவையோடு தொடர்கள் வர வேண்டும். குறிப்பாக இரண்டு பெண் டாட்டிக் கதைகள் அறவே ஒழிக்கப்பட வேண்டும்.

மாதா மாதம் ரூ.150 - 200 கொடுத்து பார்ப்பது நல்ல நிகழ்ச்சிகள் வரும் என்கிற நம்பிக்கையில்தான் என்பதை சின்னத்திரையினர் புரிந்துகொள்ள வேண்டும். விளம்பரம் பார்க்கவா காசு கொடுக்கிறோம்?

- கே.எஸ்.கோமதி,
திருநெல்வேலி

தயாரிப்பாளர்கள், இயக்குநர்கள், விளம்பரதாரர்கள் இந்த மூன்று தரப்பி னரும் வியாபாரம் என்ற ஒரே நோக்கில் செயல்படுவதுதான் பிரச்னையின் ஆணிவேர். பகல் 12 மணி முதல் இரவு 10.30 வரை பத்துக்கும் மேற்பட்ட சீரியல் களைப் பார்ப்பவர்கள் இருந்தட்டும்!

- ஜி.சத்யகிரிராஜன்,
திருமங்கலம்

வீட்டில் யாருடனும் மனம் விட்டுப் பேச முடியாமை, எக்குத்தப்பு சமையல், ஏடாகூடமான பரிமாறல், வயதான வர்கள் புழுக்கம்... இவற்றை மட்டுமே உருவாக்குகின்றன இன்றைய தொலைக் காட்சித் தொடர்கள். எங்களின் கணை கள் மூலம் விடுதலை கிடைக்குமானால் அதைவிட மகிழ்ச்சி வேறில்லை.

- எம்.கே.ஜவஹர்,
சென்னை - 91

**வாசகர்களின் கணைகளுக்கு சின்னத்திரையினரின் பதில்கள் அடுத்த வாரம்...**

தொகுப்பு : **அருணாஸ்**








# திருத்தியமைக்கப்பட்ட தேசிய காசநோய் தடுப்புத் திட்டம், தமிழ்நாடு

காச நோய்க்கான அறிகுறிகள் :



3 வாரங்களுக்கு மேல் தொடர்ந்து இருமல்



மாலை நேரக் காய்ச்சல்



எடை குறைதல்



பசியின்மை



நெஞ்சு வலி



நோய் குறுகிய கால சிகிச்சை (DOTS) முறை : காச நோயைக் குணப்படுத்த சிறந்த வழி (காச நோயைக் கட்டுப்படுத்தும் தேசியத் திட்டம்).

- இந்தியாவில் மூன்று நிமிடங்களில் இரு காசநோயாளிகள் மரணமடைகிறார்கள்.
- மற்ற நோய்களால் இறப்பவர்களின் எண்ணிக்கையை விட, காசநோயால் இறப்பவர்களின் எண்ணிக்கை அதிகம்.
- வருடத்திற்கு சுமார் 18 இலட்சம் மக்கள் காசநோயால் பாதிக்கப்படுகின்றனர். அதில், சுமார் 8 இலட்சம் மக்கள், சளியில் கிருமியுடன் டி.பி. நோயை பரப்பும் தன்மையுடையவர்களாக உள்ளனர்.
- கண்டுபிடிக்கப்பட்ட ஒரு காசநோயாளி முறையான சிகிச்சை எடுத்துக்கொள்ளாவிட்டால், அவர் மூலம் புதிதாக 10 லிருந்து 15 காசநோயாளிகள் உருவாகும் அபாயம் உள்ளது.
- காசநோய்க்கு எல்லா அரசு ஆரம்ப சுகாதார நிலையங்களிலும், துணை சுகாதார நிலையங்களிலும், அரசு மருத்துவமனைகளிலும், பரிசோதனையும், உலக தரம் வாய்ந்த மருந்துகளும் இலவசமாக வழங்கப்படுகிறது.
- காசநோயாளி, மருத்துவர், டாட்ஸ் பொறுப்பாளர் ஆகியோரின் கூட்டு முயற்சியால் காசநோயற்ற சமுதாயத்தை உருவாக்கலாம்.

**காசநோயற்ற சமுதாயத்தை நோக்கி விறு நடை போட உதவுங்கள்!**

பொது நலன் கருதி வெளியிடுவோர்:

மாநில காசநோய் தடுப்புச் சங்கம், சென்னை-600 006.

Visit us at: www.tn.gov.in / www.southindia.com

[illegible]/1557/[illegible]/2006

பில்கேட்ஸ், பால் ஆலென் இருவரும் இணைந்து மைக்ரோசாஃப்ட் நிறுவனத்தைத் தொடங்கியபோது, இன்றைக்குப் பிரபலமாகப் பேசப்படும் சாஃப்ட்வேர் மார்க்கெட் என்று தனியாக எதுவும் இருக்கவில்லை. காரணம், அப்போதைய கணினி ஆர்வலர்கள் பெரும்பாலும் ஹார்ட்வேரில்தான் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார்கள். அரை குதிரை வேகத்தில் ஓடும் கம்ப்யூட்டரை, ஆறு குதிரை வேகத்தில் ஓட வைப்பது எப்படி என்பதில்தான் எல்லோரும் பணத்தை, நேரத்தைக் கொட்டி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தனர்.

இதனால், சீக்கிரத்திலேயே அரை குதிரை, ஆறு குதிரையாக மாறியது. பிறகு அதை விடச் சீக்கிரமாக ஆறு, பன்னிரண்டானது; பன்னிரண்டு இருபத்து நான்கானது.

இதையெல்லாம் கவனித்துப் பார்த்த கேட்ஸ் மற்றும் ஆலென், ஒரு விஷயத்தை மிகத் தெளிவாகப் புரிந்து கொண்டார்கள். கம்ப்யூட்டர் ஹார்ட்வேர் ஆராய்ச்சி மற்றும் தயாரிப்பு நன்றாகச் சூடு பிடித்துவிட்டது. இனி மேல் இவர்களை யாராலும் நிறுத்த முடியாது. இப்படியே தொடர்ந்து முன்னேற்றம் செய்து கொண்டிருந்தால், ஒரு கட்டத்தில் ஹார்ட்வேர் என்பது கிட்டத்தட்ட இலவசத்துக்குப் பக்கத்தில் வந்துவிடும்.

ஆனால் இப்படிக் குறைந்த விலையில் கம்ப்யூட்டர்களை வாங்கிக் குவிக்கிற மக்கள், அதை வைத்துக்கொண்டு என்ன செய்வார்கள்? ஒண்ணும் ஒண்ணும் ரெண்டு என்று பத்தாவாகக் கணக்குப் போட்டுப் பார்ப்பதற்கா கம்ப்யூட்டர்?

இங்கேதான் நமக்கான வாய்ப்பு காத்திருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டார் பில்கேட்ஸ். என்னதான் கம்ப்யூட்டர் அதிவேகமானாலும், அதைப் பயன்படுத்துவதற்கான நல்ல சாஃப்ட்வேர்கள் இல்லாதவரை அது வெற்றுப் பெட்டிதான். அதனால் எந்தப் பிரயோஜனமும் இல்லை. எனவே கேட்ஸ், ஆலென் இருவரும் ஹார்ட்வேரைத் தவிர்த்து, சாஃப்ட்வேரில் கவனம் செலுத்துவது என்று தீர்மானித்தார்கள். அதனால்தான் 'மைக்ரோசாஃப்ட்' என்ற பெயர்.



பில் கேட்ஸ் எடுத்த இந்த முடிவு எவ்வளவு புத்திசாலித்தனமானது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டுமானால்,

என்.சொக்கன்




# அக்னிப் பரீட்சை!

அப்போது மிகப் பிரபலமாகிக் கொண்டிருந்த 'அல்டெய்ர்' கணினியைக் கொஞ்சம் கவனித்துப் பார்த்தாலே போதும்.

அந்தக் காலகட்டத்தோடு ஒப்பிடுகையில், அல்டெய்ர் என்பது நல்ல செயல்திறன் கொண்ட கம்ப்யூட்டர்தான். ஆனால், அதில் ப்ரோக்ராம் எழுதுவதற்கான வசதிகள் இல்லாததால், அதனால் பெரிதாக எந்தப் பிரயோஜனமும் இல்லை என்றாகி, பந்தாவுக்காக வாங்கி வைத்துக் கொள்கிற காஸ்ட்லி விளையாட்டுப் பொம்மையாகிவிட்டது.

இந்த நிலைமையை மாற்றி, அல்டெய்ரில் ப்ரோக்ராம் எழுதும் சௌகரியத்தை உண்டாக்க வேண்டும் என்பதுதான் கேட்ஸ், ஆலெனின் திட்டம். இதன்மூலம் கிட்டத்தட்ட நானூறு டாலர் செலவழித்து அல்டெய்ர் வாங்கும் மக்களும் பயனடைவார்கள், அவர்களுக்குத் தேவையான சாஃப்ட்வேர்களை எழுதி விற்பதன் மூலம் மைக்ரோசாஃப்டும் காசு சம்பாதிக்கலாம்.

சரித்திரத்திலேயே முதன்முறையாக சாஃப்ட்வேர் எழுதி, அதைக் காசுக்கு விற்கலாம் என்று முடிவெடுத்தவர் பில் கேட்ஸ்தான். வருங்காலக் கணினித்துறை சாஃப்ட்வேரை மையமாகக் கொண்டுதான் சுழலப் போகிறது என்பதில் அவருக்கு எந்தச் சந்தேகமும் இருந்திருக்கவில்லை.

அல்டெய்ர் கணினிகளை வடிவமைத்துத் தயாரித்து விற்பனை செய்துகொண்டிருந்த MITS நிறுவனம், அதற்கான சாஃப்ட்வேர்கள் எழுதும் பொறுப்பை பில் கேட்ஸ், பால் ஆலெனிடம் ஒப்படைத்தது. ஆனால், அப்போது அவர்களிடம் அல்டெய்ர் கணினி இல்லை. அது கறுப்பா, சிவப்பா, பச்சை கலந்த மஞ்சளா என்பதுகூடத் தெரியாது.

இதனால் அவர்கள் தவித்துப்போய் உட்கார்ந்துவிடவில்லை. 'அல்டெய்ர் இல்லாவிட்டால் என்ன? அதைப் போலவே ஒரு மாற்று ஏற்பாடு செய்தால் போச்சு' என்று சுறுசுறுப்பாகக் களத்தில் இறங்கினார் பால் ஆலென்.

மிகப் பிரமாதமான தில்லுமுல்லு வேலை அது. அல்டெய்ர் கணினிகளைப் பற்றிப் படித்துத் தெரிந்துகொண்ட விஷயங்களை மட்டும் அடிப்படையாகக் கொண்டு, ஹார்வர்ட் பல்கலைக் கழகத்தில் இருந்த வேறொரு கணினியில்

சிலபல மாற்றங்களைச் செய்து, அச்சு அசல் அல்டெய்ர் போலவே உருமாற்றிவிட்டார் ஆலென். ஆள் மாறாட்டம்போல, அல்டெய்ர் மாறாட்டம்!

பால் ஆலெனின் வே(லீ)லைகள் முடிந்ததும், அடுத்த கட்டத்துக்கு பில் கேட்ஸ் பொறுப்பேற்றுக் கொண்டார். கல்லூரிக்கு நீண்ட விடுமுறை போட்டு விட்டு, சுறுசுறுப்பாகப் ப்ரோக்ராம் எழுதத் தொடங்கினார்.



• பால் ஆலெனுடன் பில் கேட்ஸ்...

ஒருவழியாக யாராலும் அந்த ப்ரோக்ராமில் குற்றம் கண்டுபிடிக்க முடியாது என்கிற அளவுக்குக் கச்சிதமான நிலைக்குக் கொண்டு வந்துவிட்டார் பில் கேட்ஸ். இதற்குள், MITS நிறுவனம் கொடுத்திருந்த கெடு நெருங்கியிருந்தது.

பல மாதங்களாகக் கஷ்டப்பட்டு உருவாக்கிய ப்ரோக்ராம்களைப் பதிவு செய்து எடுத்துக்கொண்டு MITS நிறுவனத்தின் தலைமையகத்துக்குப் பறந்தார் பால் ஆலென். அல்டெய்ர் கணினிக்கான மென் பொருள்களை வடிவமைத்து, எழுதி முடித்திருந்தவர், முதன் முறையாக அப்போதுதான் அந்தக் கணினியைக் கண்ணால் பார்த்தார். ஆனால், 'ஆஹா அல்டெய்ர்' என்று ஆனந்தமாகக் கட்டிக் கொண்டு கூத்தாடக்கூட முடியாத நிலைமை. 'இதெல்லாம் எனக்குச் சர்வ சாதாரணம்' என்பது போல் அவர் MITS பொறியாளர்கள், ஆய்வாளர்களோடு பேச வேண்டியிருந்தது.

கடைசியாக கேட்ஸ், ஆலெனின் உழைப்பைச் சோதித்துப் பார்க்கிற நேரம் வந்தது. எலெக்ட்ரானிக்ஸ் பகவானைப் பிரார்த்தனை செய்துகொண்டு, தங்களுடைய ப்ரோக்ராமை 'நிஜமான' அல்டெய்ர் கணினியில் இணைத்து இயக்கினார் ஆலென்.

சில ஆரம்பத் தடுமாற்றங்களைத் தவிர்த்துவிட்டுப் பார்த்தால், அந்த ப்ரோக்ராம் நன்றாகவே செயல்பட்டது. தங்களது முதலாவது அக்னிப் பரீட்சையில் கேட்ஸும் ஆலெனும் வெற்றிகரமாக ஜெயித்துவிட்டார்கள். அவர்களது திறமையைப் புரிந்துகொண்ட MITS நிறுவனம், அடுத்தடுத்த வாய்ப்புகளை வழங்கத் தொடங்கியது.

சாஃப்ட்வேர் துறையில் பெரிதாக ஜெயிக்க வேண்டும் என்று முடிவு செய்த இந்த இருவரும் அதற்காகப் பல தியாகங்களைச் செய்ய வேண்டியிருந்தது. அவர்கள் தோற்றுவித்த மைக்ரோசாஃப்ட், MITS நிறுவனத்துடன் இணைந்து செயல்படுவது அவசியமானதால், பில் கேட்ஸ் படிப்பைப் பாதியில் நிறுத்த நேர்ந்தது. பால் ஆலென் நல்ல சம்பளம் கொடுத்துக் கொண்டிருந்த வேலையை ராஜினாமா செய்ய வேண்டியதாயிற்று.

'இதற்குமுன் யாரும் நம்பிக் கால் வைத்திராத இந்தப் புதிய துறையில் நம்முடைய வாழ்க்கைக்குத் தேவையான வருமானம் வருமா, இதற்காக நமது எதிர்காலத்தையே பணயம் வைக்கிறோமே...' என்கிற சிறு சந்தேகம், சலனம்கூட பில் கேட்ஸுக்கு ஏற்படவில்லை.

வாழ்நாளில் அவர் எடுத்த மிகப் பெரிய, மிகச் சிறந்த பிஸினஸ் முடிவு அதுதான்!

(தொடரும்)

# நடக்குமென்பார்;

**மேஷம் :** நினைத்த காரியம் கைகூடும். பணக் கஷ்டம் இருக்காது. கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் விலகிப் போவார்கள். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். திருமணத் தடை விலகும். உடல் ஆரோக்கியத்தில் நல்ல மாறுதல் ஏற்படும்.

**ரிஷபம் :** தொட்டது துலங்கும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். திருமணக் காரியம் பூர்த்தியாகும். உடல்நிலை பாதிக்காது. கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். வழக்கு முடிவுக்கு வரும். கல்வி வளம் வளர்ச்சி காணும். வீடு / மனை வாங்க நல்ல காலம்.

**மிதுனம் :** தெய்வ பலம், ஆத்ம பலம் நிறைந்து இருக்கும். உடல்நிலை நன்றாக இருக்கும். சுபச் செலவுகள் ரெடி. வெளியூர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். குடும்பம் ஒற்றுமையுடன் காணப்படும். குழந்தையால் மன சந்தோஷம் ஏற்படும்.

**கடகம் :** திருமணக் காரியம் கைகூடும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. யாரிடமும் வாக்குவாதம் தவிர்க்கவும். வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. உணவுக் கட்டுப்பாடு அவசியம். ஆரோக்கியத்தில் கவனம் தேவை.

**சிம்மம் :** மன சந்தோஷம் ஏற்படும். பண வரவு காத்திருக்கிறது. தடை விலகித் திருமணம் கைகூடும். புதிய தொழில் முயற்சி அனுகூலமாகும். மறைமுக எதிர்ப்பு இருக்கும். கொடுக்கல், வாங்கல் நற்பலனை அளிக்கும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது.

**கன்னி :** செல்வாக்கு மிகுந்து காணப்படும். திடீர் தனயோகம் கிட்டும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். சத்ரு தொல்லை நீங்கும். திருமணக் காரியம் கைகூடும். ஆரோக்கியம் பாதிக்காது. உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற்

## பரிகாரம் பதில்கள்

● என் கணவரது ஆரோக்யம் நன்றாக இருக்குமா? என் மூத்த பெண்ணுக்கு இரண்டாவதாக பிள்ளை பிறக்குமா? என் இரண்டாவது பெண்ணுக்கு எப்போது திருமணம் நடக்கும்?

**- லதாகணேஷ், ஐதராபாத்**

உங்கள் கணவருக்கு ஆயுள் பலம் தீர்க்கும். தற்போது சுக்ரதசை நடைபெறுகிறது. ஆரோக்யம் நன்றாக இருக்கும். உங்கள் மூத்த பெண்ணுக்கு இரண்டாவதாக ஆண் குழந்தை 2008-ல் பிறக்கும். இரண்டாவது பெண்ணுக்கு இந்த வருடம் திருமணம் நடக்கும். சர்ப்ப தோஷம் உள்ள ஜாதகம் சேர்க்கவும். வெளிநாட்டு வரன் அமையும்.



# நடக்கும்!

## 11.2.2007 முதல் 17.2.2007 வரை

உறவு கிடையாது.

● **என் சகோதரனின் எதிர்காலம் எப்படி அமையும்? அவன் தீய பழக்கத்திலிருந்து விடுபட்டு நல்வழிக்கு வருவானா?**

**- சுதா சீதாராமன், சென்னை - 116**

உங்கள் சகோதரர் ஜாதகப்படி 23.5.2005 வரை ராகுதசை நடைபெற்றது. ஆதலால் தீய பழக்க வழக்கங்களுக்கு ஆட்கொள்ள நேரிட்டது. தற்போது குருதசை நடப்பதால் 11.7.2007-க்குப் பிறகு ஜாதகருக்கு புத்தி நிலைமையில் மாற்றம் ஏற்படும். நல்ல எண்ணங்கள் பிறக்கும். தீயவற்றின் பிடியிலிருந்து விடுதலை கிடைக்கும்.

படும்.

**துலாம் :** திருமணக் காரியம் கைகூடும். பணப் பற்றாக்குறை இருக்காது. வாக்கு, நாணயம் காப்பாற்றப்படும். கல்வி வளம் மேலோங்கும். நீண்டதூரப் பிரயாணம் வந்து சேரும். குழந்தைகளுக்கு மன சந்தோஷம் கிட்டும். செலவுகள் சுபமானதாக இருக்கும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிப் போவார்கள்.

**விருச்சிகம் :** குழந்தைகள் பற்றின மனக் கவலை தீரும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். பொறுப்பான பதவிகள் வந்து சேரும். வீடு மாற்றம் ஏற்படும். சுபகாரியப் பேச்சுவார்த்தை நற்பலனை அளிக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வியாபாரத்தில் நல்ல பலன் கிடைக்கும். புதிய முயற்சிகள் பலன் கொடுக்கும். தூரதேச அழைப்புகள் தேடி வரும்.

**தனுசு :** மகான்களின் சந்திப்பு கிட்டும். வெளியூர்ப் பிரயாணம் உண்டு. உடல் நிலை பாதிக்காது. சுபச் செலவு உண்டாகும். வழக்கு வெற்றி அளிக்கும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். புண்ணியஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். மனதில் தைரியம் ஏற்படும். வீடு மாற்றம் ஏற்படும்.

**மகரம் :** எதிலும் கவனமுடன் செயல்படவும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. உணவுக் கட்டுப்பாடு அவசியம். வாகனத்தில் செல்லும்போது உஷார். படிப்பில் அக்கறை செலுத்தவும். யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. திருமணக் காரியம் கைகூடும்.

**கும்பம் :** உத்தியோகத்தில் இடமாற்றம், பதவி கிட்டும். பணக் கஷ்டம் விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நீண்ட கால பாக்கிகள் வசூலாகும். சத்ரு தொல்லை ஒழியும். வெளியூர்ப் பிரயாணம் வந்து சேரும். தொழில் துறையில் நல்ல முன்னேற்றம், அபிவிருத்தி ஏற்படும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும்.

**மீனம் :** எண்ணிய காரியம் யாவும் ஈடேறும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். பணக்கஷ்டம் இருக்காது. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். எதிர்ப்பு இருக்காது. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் வழியில் மன மகிழ்ச்சி ஏற்படும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும்.

**தஞ்சை பரத்வாஜ்**



"எதுக்காக காதலரைக் கைவிடுற?"

"கல்யாணத்துக்கப்புறம் நினைச்சுப் பார்க்க ஒரு சுவையான ஞாபகம் வேணுமே!"

- அம்பை தேவா

"என்னைக் கட்டின புடைவையோடு ஓடியாரச் சொல்லிட்டு, நீங்க மட்டும் எட்டு பேண்ட், பத்துச் சட்டையை சூட்கேஸ்ல நிரப்பிக் கிட்டு வந்திருக்கீங்களே! இது நியாயமா?"

- உ.ராஜாஜி





"ஊரை விட்டு ஓடலாம்னா எதுக்குத் தயங்கறீங்க?"

"இந்த ஊர் போலீஸ் ஸ்டேஷன்ல தினம் கையெழுத்துப் போட வேண்டியிருக்கே!"

- அம்பை தேவா

"அன்பே, உனக்காக என்னோட உடல், பொருள், ஆவி எல்லாத்தையும் தரத் தயாரா இருக்கேன்!"

"நீங்க என்ன தர்றது, கல்யாணத்துக்கு அப்புறம் நானே அதையெல்லாம் எடுத்துட மாட்டேனா?"

- ஆர்.ஆர்.பூபதி







''உயிருக்குயிரா நீ லவ் பண்ணின லீலாவை எப்படிடா உன்னால வெறுக்க முடிஞ்சது?''

''என் கல்யாணத்துக்குக் கூட அவ வரலையே... அவகூட எனக்கென்னடா பேச்சு!''

- எம்.அசோக்ராஜா

# சுண்டல் காதல்!

''ரமா... இப்பல்லாம் பீச்சுக்கு வர்றப்ப வீட்டிலேயே சுண்டல் பண்ணி எடுத்துட்டு வந்திடுறியே ஏன்?''

''முன்னாடி என்னைக் காதலிச்சவர் இங்கேயே சுண்டல் விக்கிறார் சுரேஷ், அதான்!''

- எம்.அசோக்ராஜா





''கலா... நம்ம கல்யாணத்தை எப்ப வச்சுக்கலாம்?''

''உங்க கல்யாணத்தை அடுத்த மாசம் வையுங்க... என் கல்யாணத்தை அதற்கு அடுத்த மாசம் வச்சுக்கலாம்!''

- குலசை கமீருஜ்முதீன்

# காதல் என்பது...




• இந்திரா




• ஏழுமலை




• ரங்கப்பிரியா










• முருகேசன்




• பெரியண்ணன்





• புவனேஸ்வரி




• ராமநாதன்




• சுப்பம்மாள்




• குணசேகரன்




• வசந்தி




• ரவி

• தணிகாசலம்

- மஜோ
படங்கள் : பொள்ளாச்சி சுந்தரம்



# தார்மீகக் கடமை!




**மாசடையும் உலகமும் நம் கடமையும், எஸ்.பேராசிரியன் - மணிமேகலைப் பிரசுரம், 7, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.50/-**

இறைவன் நமக்களித்த மிகப்பெரிய செல்வம் இயற்கை. நீர், நிலம், காற்று ஆகியவற்றை மனிதன் எந்த அளவுக்கு மாசுப்படுத்திக் கொண்டிருக்கிறான் என்பதையும் அதனால் ஏற்பட்டுள்ள அபாயங்களையும் சுட்டிக் காட்டும் நூல். கூடவே 'இதை மனிதனே தான் தடுக்க வேண்டும்' என்ற தார்மீகக் கடமையையும் உணர்த்துகிறார் நூலாசிரியர்.

**மறக்கப்பட்ட மங்கையர் திலகங்கள், கே.ஜீவபாரதி - குமரன் பதிப்பகம், 3, முத்துகிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை - 17 விலை.ரூ.30/-**

எந்த ஒரு போராட்டத்தின் வெற்றியாக இருந்தாலும் அதில் ஆண்களைப் போலவே பெண்களுக்கும் பங்குண்டு. ஆனால், ஆண்களின் தியாகங்கள் முன்னிலை படுத்தப்படும் அளவுக்குப் பெண்கள் பேசப்படுவதில்லை. சுதந்திரப் போராட்டத்தில் பெண்களின் பங்களிப்பும் மகத்தானது. அப்படிப்பட்ட தியாகச் சுடர்களைப் பற்றின தொகுப்பு.

**மரணத்துக்குப் பின், பொ.சங்கரப் பிள்ளை - குமரன் பப்ளிஷர்ஸ், 3, மெய்கை விநாயகர் தெரு, வடபழனி, சென்னை - 26. விலை ரூ.70/-**

'மரணத்துக்குப் பின் வாழ்வுண்டா?', 'நான் யார்?' இந்த இரண்டு கேள்விகளுக்கும் இதுவரை உறுதியான விடை கிடைத்ததில்லை. எத்தனையோ ஆய்வுகள் நடந்து கொண்டே இருக்கின்றன. பல்வேறு சமயங்கள் முதல், தற்கால அறிஞர்களின் நூல்கள் வரை என்ன சொல்கின்றன என்பதை விவரிக்கும் நூல்.




**மலை, ஆர்.ரத்தினசாமி – தேவி பதிப்பகம், ஃபாரஸ்ட் ரோடு, கெம்பநாயக்கன்பாளையம் (அஞ்சல்), சத்திய மங்கலம் - 638 509. விலை ரூ.40/-**

கவிதைத் தொகுப்பு. இயற்கை, மனித உறவுகள், உருவகங்கள், காலங்களென அனைத்துத் தலங்களிலும் கவிஞரின் எழுதுகோல் பயணித்துள்ளது. பல கவிதைகளில் சொல் வீச்சு சிறப்பாக உள்ளது.

**- அத்தியாயன்**

# அக்கம் பக்கம்



**நா**ட்டில் இப்போது மிகவும் மனம் நொந்து போயிருக்கும் அமைச்சர் யார் தெரியுமா? சைபுதீன் சோஸ், மத்திய நீர்வளத் துறை அமைச்சர். காரணம், முல்லைப் பெரியாறு விவகாரம்தான். தமிழ்நாடு, கேரளா இரு தரப்புக்கும் மூக்குடைப்பு இல்லாமல், தீர்வு காண வேண்டும் என்று நினைத்து, இரு தரப்பினரையும் கூப்பிட்டுப் பேசி, கடைசியில் தானே மூக்குடைபட்டுக் கொண்டார். பிரதமருக்கு இதில் அதிருப்தியாம்! அடுத்த மந்திரி சபை மாற்றத்தின் போது, இவருக்கு வேறு இலாகா ஒதுக்கப்படுவது உறுதி என்று சொல்கிறார்கள்.



● நரேந்திர மோடி



● பால் தாக்கரே

**நே**பாள நாட்டின் 500 மற்றும் 1000 ரூபாய் நோட்டுகளில் இதுவரை இடம்பெற்றிருந்த நேபாள மன்னர் ஞானேந்திராவின் படம், இனி இருக்காது. அவருக்குப் பதிலாக புத்தரின் படம் இடம்பெறும். நேபாளத்தின் அமைச்சரவை இந்த முடிவை எடுத்திருக்கிறது.

# ரூபாய் நோட்டில் புத்தர்!

**'ப**ர்சானியா' - 2002ஆம் ஆண்டு நடந்த குஜராத் கலவரத்தினை மையமாக வைத்து எடுக்கப்பட்டிருக்கும் ஆங்கில - இந்திப் படம். நசுருதீன் ஷா, சரிகா (கமல்) இருவரும் பிரதான பாத்திரத்தில் நடித்திருக்கும் இந்தப் படம் குறித்து பலத்த சர்ச்சை எழுந்துள்ளது. மகனைக் கலவரத்தில் இழந்த தம்பதியின் உணர்ச்சிப் போராட்டம் என்று சொன்னாலும், கலவரக் காட்சிகள்தான் பிரதானப்படுத்தப்பட்டுள்ளன. இந்தப் படம் குஜராத்தில் ரிலீஸ் ஆனால், சட்டம் ஒழுங்கு பாதிக்கப்படும் என்று சொல்லிவிட்டார் குஜராத் முதல்வர் நரேந்திர மோடி. அதனால் படம் குஜராத்தில் ரிலீஸ் ஆக வில்லை.

**சி**வசேனைத் தலைவர் பால் தாக்கரேவுக்கு வயது எண்பது. உடல்நலம் குன்றியதன் காரணமாகவும், பாதுகாப்புக் காரணங்களுக்காகவும் வெளி நிகழ்ச்சிகள் எதிலும் கலந்து கொள்ளாமல், பிறந்த நாளன்று வீட்டிலேயே தங்கிவிட்டார். வீட்டுக்கு வெளியில் கூடிய கட்சித் தொண்டர்களைப் பார்த்து ஜன்னல் வழியே கையசைத்தார். அவரது கட்சிப் பத்திரிகையான 'சாம்னா' எண்பது பக்க அளவில் 'தாக்கரே சிறப்பு மலர்' வெளியிட்டது. அதில் தாக்கரேவைப் பற்றிக் கட்டுரை எழுதியவர்களுள் அத்வானி, அமிதாப், ஆஷா போன்ஸ்லே, ராகுல் பஜாஜ், முகேஷ் அம்பானி ஆகியோரும் அடக்கம்.

**- எஸ்.சி.எம்.**

# மலரினும் மெல்லியது...

## சுகந்தி ஜி.பாரதி

இன்றைக்கு ஏனோ அம்மாவின் மேல் கட்டுக்கடங்காத கோபம் வந்தது எனக்கு. பின்ன என்னங்க, முப்பத்து மூணு வயசாகியும் இன்னும் எனக்குக் கல்யாணம் ஆகல! ஆனா ஆறு வருஷத்துக்கு முன்னாடி கல்யாணமாகி ஓர் அழகான கொழந்தையும் இருக்கிற அண்ணா - அண்ணிகிட்ட அம்மா 'இன்னொரு கொழந்த பெத்துக்கோ வசுமதி... அப்பத்தானே ஐஸுக்குத் தொணையா இருக்கும். நல்லது, கெட்டதுன்னா எப்பிடி. நீ உடனே உங்க அக்கா, அண்ணாகிட்ட சொல்றியோ, அதுமாதிரி ஐஸுக்கும் வேணுமில்ல? தனியா இருந்தா மூர்க்கத் தனம்தான் அதிகமாகும். ஷேர் பண்ணிக்கிற பழக்கம் வராது. அதுவுமில்லாம அவளுக்கு வெளையாட யாருமில்லாம திண்டாடுறா. அதுக்காகவாவது இன்னொரு கொழந்த பெத்துக்கோ'ன்னு மூச்சுவிடாமப் பேசினாங்க. ஆனா அண்ணா, அம்மா பேச்சைக் காதுலயே போட்டுக்கல. 'சும்மா இருங்கம்மா'ன்னு அதட்டல் வேற.

'என்னடா, மூத்ததா பொறந்த பையனுக்கும், கடைசியா பொறந்த பொண்ணுக்கும் நல்லபடியா கல்யாணம் பண்ணிட்டோமே, எடையில நிக்குற இவனுக்குச் சீக்கிரம் பண்ணணுமே'ங்குற சிந்தனை அம்மாவுக்கு விட்டே போயிடுச்சு.

'ச்சீ... ஒரு ஆம்பள கல்யாணம் ஆகலேன்னு இப்படிப் பொலம்புறானே'ன்னு நீங்க எல்லாம் தப்பா நெனச்சாலும் பரவாயில்லைங்க. என் கஷ்டம் எனக்கு. என் ஃப்ரெண்ட்ஸ் எல்லாத்துக்கும் கல்யாணம் ஆயிடுச்சு. என்கூட எம்.பி.பி.எஸ். பண்ணின எல்லா பொண்ணுங்களுக்கும் ஏழு வயசு, எட்டு வயசு கொழந்தைங்க இருக்குது. என் ஹாஸ்பிட்டல்ல வேலை பாக்குற டாக்டர் கலீக்ஸ் எல்லாருக்கும் கல்யாணம் ஆயிடுச்சு. எனக்கு மட்டும் ஆகலேன்னா வருத்தமா இருக்காதா? நீங்களே சொல்லுங்க.

எந்த விசேஷத்துக்குப் போனாலும் 'நீங்க எப்ப கல்யாணச் சாப்பாடு போடப் போறீங்க?'ன்ற கேள்விய சலிக்காம எல்லாரும் கேக்குறாங்க. கேக்குறவங்களுக்கு போரடிக்கல, ஆனா அந்த வார்த்தைகளுக்கு போரடிச்சுப் போச்சு... சில நேரங்கள்ல எனக்கும். கல்யாணம் ஆகாத பொண்ணுங்களுக்கு மட்டும்தான் பிரச்னைன்னு தயவுசெஞ்சு நினைக்காதீங்க. என்ன மாதிரி ஆம்பளைங்களுக்கும் உண்டு. ஒரு அஞ்சு நிமிஷம் சேர்ந்த மாதிரி ஒரு நர்ஸ்கிட்டயோ, இல்லாட்டா ஏதோ ஒரு பொண்ணுகிட்டயோ



பேசினா போதும், உடனே 'என்னடா அந்தப் பொண்ண லவ் பண்றியா'ன்னு கேக்குறாங்க. இதனாலயே எந்தப் பொண்ணுகிட்டயும் பேசவே பயமாயிருக்கு. பாவம், அவங்க பேரு ரிப்பேர் ஆயிடக் கூடாதுல்ல.

அம்மாவுக்குத்தான் எனக்குப் பொண்ணு பார்த்துப் பார்த்து அலுத்துப் போச்சு. கல்யாணம் கூடி வர்ற மாதிரி வரும். ஆனா ஏதாவது ஒரு காரணத்தால நின்னுடும். அம்மாவும் ஏதேதோ பரிகாரம் செஞ்சு பாத்துட்டாங்க. திருமணஞ்சேரிக்கு மட்டும் மூணு தடவை போயிட்டேன். திருநள்ளாறு போயி சனீஸ்வர பகவானுக்கு என்னவெல்லாமோ பண்ணினேன். அந்த குளத்துல முங்கினேன். ஆலங்குடி குரு பகவானைச் சுத்தினேன். எல்லாம் அம்மாவோட திருப்திக்குத்தான். எனக்குக் கடவுள் நம்பிக்கை எல்லாம் பெருசா கிடையாது. அம்மா என் ஜாதகத்தை

நீட்டாத ஜோசியர் கிடையாது. தமிழ் நாட்டுல கொடுக்காத மேட்ரிமோனியல் விளம்பரம் கிடையாது. அலைஞ்சு அலைஞ்சே அம்மா வெறுத்துப் போயிட்டாங்களோ என்னமோ, இப்பவெல்லாம் அலட்டிக்கறது இல்ல.

ஆனா இந்த அண்ணா எனக்குப் பொண்ணு தேடலாமில்ல? அம்மாவுக்கு வயசாயிடுச்சு, முன்ன மாதிரி அலைய முடியல. அண்ணன் ரொம்ப அதிர்ஷ்டசாலிங்க. எம்.டெக். முடிச்ச உடனே




"கும்பகர்ணன் மாதக் கணக்கில் தூங்கினான். இது என்ன காலம்?"
"கொசுவே இல்லாத காலம் சார்..."

- த.கணேஷ்குமார், சின்னவாளவாடி

வேலை கெடச்சிடுச்சு. வேலை கெடச்ச ஆறு மாசத்துல கல்யாணம். மணிரத்னத்தோட 'ரோஜா' படம் பாத்திங்களா? அதுல அக்காவ பொண்ணு பார்க்கப் போயி, கடைசியில தங்கச்சிய கல்யாணம் பண்ணிக்குவாரே ஹீரோ... அந்தக் கதைதான் அண்ணனுக்கும். ஆரம்பத்துல அண்ணிகிட்ட ஒட்டவே மாட்டான். அதிகமா பேசக்கூட மாட்டான். எரிஞ்சு விழுந்துட்டே இருப்பான். அவங்க செய்யற சமையல்ல இருந்து போட்டுக்கிற டிரெஸ் வரைக்கும் விமர்சனம் பண்ணிக்கிட்டே இருப்பான். அவங்களும் சளைச்சவங்க இல்ல. அப்பப்ப பதிலுக்குப் பதில் பேசிடுவாங்க. அம்மாகூட 'ஐயோ, இந்த வண்டி ரொம்ப நாள் தாங்காது போலிருக்கு ராகவா'ன்னு என்கிட்ட பொலம்புவாங்க.

எனக்கே சில சமயம் 'ச்சீ'ன்னு ஆயிடும். 'ஐஸ்'கூட இவங்களுக்குக் கல்யாணம் ஆகி ரெண்டு வருஷம் கழிச்சுத்தான் பொறந்தா. அவ பொறந்து ஆறேழு மாசங் கழிச்சுத்தான் அண்ணிகிட்ட ஒட்டினான். அப்ப ஒட்டினவன்தான், அதுக்கப்புறம் 'வசுமதி வசுமதி'ன்னு அவங்க பின்னாடியே சுத்துறான். இப்பவெல்லாம் ஒருநாள்கூட அண்ணியப் பிரிஞ்சிருக்கிறது இல்ல. ஒரு நாள் என்ன, ஒரு ராத்திரிகூட பிரியறது இல்ல. சில சமயம் எனக்கேகூடத் தோணும் - 'இந்த ராத்திரிகளுக்காகத்தான் இவன் மாறிட்டானோ'ன்னு.

அண்ணி, அண்ணனோட பார்வைய வைச்சே அவன் என்ன மூடுல இருக்கான்னு புரிஞ்சுக்குவாங்க. அண்ணியோட நடைய வைச்சே அவங்க என்ன நெனக்கிறாங்கன்னு இவன் சொல்லுவான். அதுவும் இப்பல்லாம் அண்ணி என்னுன்றதுக்கு முன்னால எண்ணெயா இருந்து கைக்காரியத்தை வாங்கிச் செய்யறான்.

அண்ணிகூட ஒரு முறை என்னைக் கேட்டாங்க 'ஒரு பொண்ணு'கூடவா உங்கள லவ் பண்ணல'ன்னு. எனக்கு ஏனோ காதலைப் பத்திப் பெரிய அபிப்ராயம் இல்ல. அப்படி சொல்றதவிட நம்பிக்கை இல்ல. எனக்கு ஒரு மாரல் சப்போர்ட்டா ஒரு துணை, என் உணர்வுகளைப் பகிர்ந்துக்க ஒரு ஆள் தேவை. அந்த உறவு கல்யாணத்தால் மட்டுமே சாத்தியம்ங்கறதாலதான் 'கல்யாணம், கல்யாணம்'ங்கறேன். கல்யாணம்ங்கறது 'தாம்பத்யத்துக்கு அனுமதிச் சீட்டு'ன்னு ஒரு காலத்தில் நானும் வசனம் பேசியிருக்கறேன். இப்போ... முடியல...!

ச்சே... என் கல்யாணத்தைப் பத்தி ரொம்பப் பொலம்பிட்டேன். இப்போ ஆடிட்டோரியத்துல ஒரு லெக்சர் இருக்கு. அதுகூட 'தாம்பத்யம்' பத்தினதுதான்.



## ஆகஸ்ட்டில் எதிர்பார்ப்பு!

இனிமேல் ஜோதிகா, நடிப்பு சம்பந்தமாக எந்தவொரு சின்ன கமிட்மெண்ட்ஸும் வைத்துக் கொள்ளப் போவதில்லையாம். குடும்ப நிர்ப்பந்தத்தினால் அல்ல; குடும்பத்தில் புது உறுப்பினர் வரப் போகிறார். ஆம்! குட்டி ஜோதிகாவையோ, சூர்யாவையோ இந்த வருட ஆகஸ்ட்டில் எதிர்பார்க்கலாம். ஐஸ்வர்யா - தனுஷுக்குப் பிரசவம் பார்த்த அதே டாக்டர்தான் ஜோதிகாவுக்கும்.

நான் அதைவிட்டாலும், அது என்ன விடமாட்டேங்குது!

ஏ.சி. ஹாலின் குளிர் ரம்யமா இருக்குது. ஆனா அதை அனுபவிக்க விடாம, இந்த மனுஷன் 'லெக்சர்'ன்ற பேர்ல கொல்றார். யாரு, எங்க ஹாஸ்பிடல் சீஃப் டாக்டர்தான். கம்ப்யூட்டர் பவர் பாயிண்டுல எதையோ போட்டு 'அறுஅறு'ன்னு அறுக்குறார். தாங்க முடியல. மனுஷன் பேசியே சாகடிச்சுடுவார். சப்ஜெக்ட் என்ன தெரியுமா? 'ஆல்டர்நேட் செக்ஸ்'.

"டியர் ஃப்ரண்ட்ஸ், இவளோ நேரம் பாராப்லீ ஜியா பாதிப்பு உள்ளவங்களுக்கான ஆல்டர்நேட் செக்ஸ் பத்திச் சொன்னேன். உலகத்துல எல்லா விஷயங்களுக்கும் ஒரு மாற்று இருக்கு. இன்னவரைக்கும் மருத்துவத் தீர்வு இல்லாம இருக்குற பாராப்லீஜியா, குவாட்ருப்லீஜியா பேஷண்டுகளுக்கும் மனசு இருக்கும்; ஆசை இருக்கும். ஆனா தாம்பத்யத்துல ஈடுபட வழியில்லாம நரம்பு மண்டலப் பிரச்னை. அவங்களுக்கான மாற்றுத் தாம்பத்தியத்தைத்தான் இப்போ சொன்னேன்.

இப்போ நம்ம மருத்துவ உலகத்துக்கே பெரிய சவாலா இருக்கறவங்க இந்த மாதிரி தம்பதியர்தான். இன்னொரு கேஸ் பாருங்க... நம்ம மாதிரியான டாக்டர்களின் அலட்சியத்தால், கருச்சிதைவைச் சுத்தம் செய்யறப்போ கருப்பையில உணர்வுகளைக் கடத்துற நரம்புகள் ரொம்பப் பாதிப்படைஞ்சு போயிருக்கு இவங்களுக்கு. அந்த நரம்புகள் முதுகுத் தண்டுவட நரம்புகளோட இணைஞ்சிருக்கு. இதுல என்ன அதிர்ச்சின்னா, அவங்க தாம்பத்தியத்தில் ஈடுபட்டால், ஏற்கெனவே பழுதடைந்த நரம்புகள் செயலிழந்தே போயிடக்கூடும். அப்படி ஆனால், இடுப்புக்குக் கீழ மொத்தமா உணர்ச்சியே இல்லாமப் போயிடும். இத்தன பெரிய ரிஸ்க் இருக்கறதால தாம்பத்யம் இவங்களுக்கு வெறும் கனவுதான்! இவங்களுக்கு நோ ஆல்டர்நேட் செக்ஸ். டாக்டர்களோட அலட்சியத்தால் அவங்களுக்கு எத்தன பெரிய இழப்பு பார்த்தீங்களா?

இதோ அவங்க பேசறதைக் கேளுங்க..." என்று திரையில் விடியோ கிளிப்பிங்கைக் காட்டினார்.

எனக்குக் கண்ணை இருட்டிக் கொண்டு மயக்கம் வந்தது. திரையில் என் அண்ணன், அண்ணி. காட்சிகள் சரியாகப் புரியவில்லை, தெரியவில்லை. என்னால் சுத்தமாக முடியவில்லை. இரண்டு, மூணு நிமிஷங்கள் கழிச்சுத்தான் ஸ்கிரீன் கொஞ்சம் தெளிவாகத் தெரிந்தது.

யார் என்ன, கேள்வி கேட்டாங்கன்னு தெரியல. அண்ணன் "இரவுகளைத் தாண்டி பகல்லயும் வாழ்க்கை இருக்குன்னு நான் நம்புறேன். அந்த நம்பிக்கைதான் வாழ்க்கை. அந்த நம்பிக்கைதான் காதல். ஆஃப்டர்ஆல் ஷீ இஸ் மை லவ் அண்டு லைஃப்" அண்ணியை அணைத்தபடி அண்ணன் இன்னும் ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தான்.

என் அருகில் அமர்ந்திருந்த சிலர் கண்ணாடியைக் கழற்றிக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள். முதன்முதலாக காதலையும், கடவுளையும் ஆழமாக நம்பினேன். ●

# அடையாளம்



# சிவாஜியில் இன்னொரு சூப்பர் ஸ்டார்!

**'சிவாஜி' படத்தில் ரஜினி நடிப்பது இனிமேல் பிறக்கப் போகிற குழந்தைக்குக் கூடத் தெரிந்த விஷயம். 'சிவாஜி' படத்தில் இன்னொரு சூப்பர் ஸ்டாரும் நடிக்கிறார் என்று உங்களுக்குத் தெரியுமா? அவர், பட்டிமன்ற சூப்பர் ஸ்டாரான பேராசிரியர் சாலமன் பாப்பையா! தம் அனுபவங்களை நம்மிடம் விவரித்தார்...**

"சிவாஜி படத்தில் ஷ்ரேயாவின் வீட்டுக்கு எதிர் வீட்டில் வசிக்கிற, பெண்களைப் பெற்றுவிட்டு அல்லாடும் தகப்பனாக நடிக்கிறேன். எழுத்தாளர் சுஜாதா மூலமாகத்தான் இந்த வாய்ப்பு கிடைத்தது.

முதல் நாளே எனக்கு இன்ப அதிர்ச்சியூட்டும் அனுபவம் ஒன்று ஏற்பட்டது. நான் செட்டில் ஒரு பக்கமாக உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தேன். என்னைக் கண்டதும் பலரும் புன்முறுவல் செய்வதும், வணக்கம் சொல்வதும், 'ஐயா! நல்லா இருக்கீங்களா?' என்று நலம் விசாரிப்பதுமாக இருந்தனர். அப்படித்தான் ஒருவர், என்னை நெருங்கி வந்து, 'ஐயா! சௌக்கியமா?' என்று விசாரிக்க, நான் 'நல்லா இருக்கேன்' என்றுவிட்டு என் படிப்பைத் தொடர்ந்தேன். என்னை விசாரித்தவர் அங்கிருந்து சென்றவுடன், என் பக்கத்தில் இருந்த ஒருவர், 'ஐயா! உங்ககூட பேசினது யாருன்னு தெரியலையா?' என்று கேட்க, நான் 'தெரியலையே' என்றேன். 'அவரு ரஜினி' என அவர் சொன்னவுடன் எனக்கு இன்ப அதிர்ச்சி ஏற்பட்டது. உடனே ரஜினி எங்கே இருக்கிறார் என்று விசாரித்துக் கொண்டு போனேன். அவருடைய புதுமையான, இளமையான தோற்றத்தில் என்னால் அவரை அடையாளம் தெரிந்து கொள்ள முடியாததைச் சொல்லி வருத்தம் தெரிவித்தேன். ரஜினி சிரித்துக் கொண்டே, 'நான் இதையெல்லாம் தப்பாக எடுத்துக் கொள்வேனா? உங்களுக்கு என்னை அடையாளம் தெரியவில்லை என்றால், அது என் கேரக்டருக்கு சக்சஸ்தானே?' என்றார்.

சில நாட்கள் கழித்து, நானும் ரஜினியும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்போது எங்களை நெருங்கி வந்த ஒருவர், எனக்கு வணக்கம் போட்டு விட்டுச் சென்று விட்டார். நான் அவரை அழைத்து, 'ரஜினியை அடையாளம் தெரியலையா?' என்று கேட்க, அவர், 'ரஜினி சாரா இவர்?' என்று அதிர்ச்சியுடனும், ஆச்சரியமாகவும் கேட்டார். நான் ரஜினியிடம், 'அன்றைக்கு நான் இதே மாதிரிதான் உங்களை அடையாளம் தெரிந்து கொள்ளவில்லை' என்றேன். ரஜினி சிரித்தார்."

**- எஸ்.சந்திரமௌலி**

பேட்டி



# "எழுத்தாளன் எது செய்தாலும் பிரச்னை!"

## வண்ணநிலவன்



**'கடல் புரத்தில்', 'ரெயினீஸ் ஐயர் தெரு' போன்ற சிறந்த படைப்புகளைத் தமிழுக்குத் தந்த எழுத்தாளர் வண்ண நிலவனிடம் இருந்து மிக நீண்ட இடைவெளிக்குப் பிறகு வெளிவந்திருக்கும் நாவல் 'காலம்'. இந்த இடைவெளிக்கு என்ன காரணம் என்று அவரிடம் கேட்டோம்.**

"சிறுகதைகள் எழுதும்போது கிடைத்த திருப்தி, நாவல்கள் எழுதியபோது எனக்குக் கிடைக்கவில்லை. எழுதுறதுக்கு எவ்வளவோ விஷயம் இருக்கு. நானாக எழுதினது கொஞ்சம்தான். யாராவது கேட்டதால் எழுதிக் கொடுத்தது தான் அதிகம். இப்ப எழுதச் சொல்லிக் கேட்டாலும் மூணு பக்கத்துக்குள்ள ஒரு கதை கொடுங்கன்னுதான் கேக்கறாங்க."

**இணையத்தில் இந்தப் பிரச்னைகள் எல்லாம் இல்லையே... அதில் நீங்க தொடரலாமே?**

"இந்தக் 'காலம்' நாவல்கூட இணையத்துல வந்ததுதான். கேட்டு வாங்கிப் போட்டதால இணையத்துல எழுத முடிஞ்சது. இப்ப அது புத்தகமா வந்திருக்கு."

***70*களின் தொடக்கத்திலிருந்து இத்தனை வருஷம் எழுதியிருக்கீங்க. சிறுகதைகள் அதிகமாவும் நாவல்கள் குறைவாவும் இருக்கே, என்ன காரணம்?**

"சிறுகதைகளில் சோதனை முயற்சியா பல விஷயங்களைச் செய்து பார்க்க முடிஞ்சது. ஓரளவு நல்ல சிறுகதைகளைக் கொடுத்த திருப்தி இருக்கு. ஆனால், நாவல் என்கிற விஷயத்தில் எனக்கு அப்படித் தோணலை. நான் இதுவரைக்கும் நூறு பக்கம், நூற்றிருபது பக்கம் வர்ற அளவுலதான் எழுதியிருக்கேன். அதுல சிலவற்றைக் குறுநாவல்னுதான் சொல்லணும். க.நா.சு. அடிக்கடி சொல்வார்... 'சோதனை முயற்சிகள் எப்பவும் இருந்துக்கிட்டே இருக்கணும். எழுதுறது சிறுகதையோ, நாவலோ, கட்டுரையோ - எதுவா இருந்தாலும் அதை வெவ்வேற

மாதிரி எழுதிப் பார்க்கணும்'னு. நாவல்ல சோதனை செய்யற மாதிரி நான் இன்னும் எழுதலை. சிறுகதைங்கற சின்ன மீடி யத்துல எழுதற மாதிரி கிடையாது நாவலுங்கறது. அது வேற ஒரு மீடியம்."

**ஆனா, 'கடல்புரத்தில்' நாவல் உங் களுக்குச் சிறப்பா அமைஞ்சதே...**

"கடல்புரத்தில் நாவலைப் பற்றி இப் பவும் நிறைய புகழ்ந்து பேசறாங்க. அது இப்ப பிரிண்ட்ல இல்லை. பிரிண்ட் பண்ணலாம்னு ஒருத்தர் வந்து கேட்டப்ப எனக்கு அந்த நாவலை மறுபடியும் கொண்டு வர்றதுல விருப்பமில்லைன்னு தான் சொன்னேன். முன்னுரை எழுதித் தரக் கேட்டபோதுகூட நான் எழுதித் தரலை.

கடல்புரத்தில் ஒண்ணும் அவ்வளவு



சிறப்பா இல்லை. அந்த நாவலைத் தொலைக்காட்சித் தொடரா எடுக்கும் போது நிறைய பிரச்னைகள் வந்தன. அந்த வட்டாரச் சமூகத்தாரிடையே நிறைய பிரச்னைகள் வந்தன.

சுஜாதா ஒரு நாவலை எழுதினப்ப, குறிப்பிட்ட ஒரு சமூகத்தைப் பத்தி எழுதிட்டாருன்னு அவருக்கு எதிர்ப்பு தெரிவிச்சாங்க. இன்றைய சூழலில் எழுத் தாளன் என்ன செய்தாலும் அதுல என்ன பிரச்னைன்னு கண்டுபிடிக்கவே நிறைய பேர் காத்திருக்காங்க."

**'காலம்' நாவல்ல அப்படி எதுவும் பிரச்னை வந்ததா?**

"காலம் நாவல் கோர்ட், வக்கீல்கள் பற்றியது. இந்த நாவலுக்கு முதல்ல 'கறுப்பு கோட்' என்றுதான் பெயர் வைத்தேன். எதுவும் பிரச்னை வந்துடக் கூடாதேன்னு தான் நாவலோட பெயரைக் காலம்னு மாற்றினேன். கோர்ட், வக்கீல்கள் பற்றிய விஷயங்களைக் களமாகக் கொண்டு ஒரு காதல் கதையைச் சொன்னேன். கண் ணால பார்த்த பல விஷயங்களைத்தான் நாம எழுதறோம். அதுலயும் எல்லா விஷயங்களையும் சொல்ல முடியற தில்லை. அப்படிச் சொல்றதுக்கு ஒரு கதை தேவையிருக்கு. அதுதான் அந்தக் காதல் கதை."

**இப்பொழுது வரும் நாவல்கள் எப்படி இருக்கு?**

"இப்பல்லாம் பிரம்மாண்டமா அறு நூறு பக்கத்துக்கு எழுதறாங்க. நண்பர் ஒருத்தர் ஒரு நாவலைக் குறிப்பிட்டு, அதைப் படிக்கச் சொன்னார். ஆனால், அதுல ஒரு சில பக்கங்களைக்கூட

**"பத்து வரி**

**படிக்கிறதுக்குள்ளேயே**

**பாறையைத் தூக்கிக் கையில**

**கொடுத்த மாதிரி ஆயிடுது!"**

என்னால படிக்க முடியலை. அப்படியே படிச்சுப் பார்த்தாலும் அறுநூறு பக்கக் கட்டுரை படிக்கிற மாதிரியான உணர்வு தான் இருக்கு."

**மாடர்னிஸம், போஸ்ட் மாடர்னிஸம் போன்றவை தேவையில்லை என்று சொல்லிவிட முடியுமா?**

"சுந்தர ராமசாமி 'ஜே.ஜே. சில குறிப்பு கள்' எழுதினார். மாடர்னிஸம் சார்ந்த விஷயம்தான். ஆனால், அவர் எழுதினது படிக்கிற மாதிரி இருந்தது. படிக்க முடிஞ் சது. ஆனால், போஸ்ட் மாடர்னிஸம்னு சொல்லிக்கிட்டு எழுதுற பல விஷயம் படிக்கவே முடியாமல் போகுது. பத்து வரி படிக்கிறதுக்குள்ளயே பாறையைத் தூக்கிக் கையில கொடுத்த மாதிரி ஆயிடுது."

**- முத்துராமன்**

படங்கள் : **பொள்ளாச்சி சுந்தரம்**

# போட்டி முடிவு!



24.12.2006 இதழில், ஆசிய விளையாட்டுப் போட்டியில் வென்ற ஓட்டப்பந்தைய வீராங்கனை சாந்தியைப் பாராட்டி கவிதை எழுதச் சொல்லியிருந்தோம். வந்தவற்றில், தலா ரூ.250 பரிசு பெறுபவை...

மனவலிமைதானே
வெற்றியைத் தீர்மானிக்கின்றது!
வீரத்துக்கு ஏன்
உடல் சோதனை...?

- சூர்யபாரதி, திருப்பத்தூர்

பிழை சொல்வோரைப் புறம்தள்ளு தோழி
உழைப்புக்கு என்றுமே இல்லை வேலி
வெள்ளிப் பதக்கம் போகட்டும் விடு நீ
வெற்றிப் பதக்கம் பெறும்நாள் வருமினி!

- து. உமாதேவி, கோவை

அமைதிக்குப் பெயர் சாந்தி
புயலுக்கும் வைப்போம் சாந்தி
சும்மாவா கொடுத்தார்கள் வெள்ளி
சர்ச்சைக்கும் வரும் முற்றுப்புள்ளி!

- இரா.சங்கர், திருப்பத்தூர்

- தீவிரவாதத்தில்
தூரத்தியது இலங்கை!
தமிழகம்
தந்ததோ வறுமை!
போராடும்படி
சொன்னது திறமை!
இப்பொழுது
நீயோ வீரப்பதுமை!

- தமிழ்ப் பாண்டியன், சென்னை

# இப்போது நீ...



வெள்ளிப் பதக்கத்தை தோஹாவில்
அள்ளிக் கொணர்ந்தாள் சாந்தி
அள்ளிக் கொணர்ந்த சாந்திக்கு
அள்ளிக் கொடுத்தது தமிழ் நெஞ்சம்!

- பொ.நெல்லையப்பன், சென்னை

செங்கல் சூளைச் சாம்பலுக்கு
சிவப்புக்கல் கிரீடம்
ஆசியாவில் 'வெள்ளி' மின்னல்
ஒலிம்பிக்கில் 'தங்க' மழை

- சோ.பாலசுப்பிரமணியன், வளையமாபுரம்

வேகத்துக்காக வந்த பதக்கம்
வேகமாகப் பறிபோனதில்
நாங்கள் சோகமாக இருக்கிறோம்
நீயோ சாந்தியாகவே இருக்கிறாய்!

- ஆ.சண்முகசுந்தரம், திருச்சி

# தெல்லி வீரன்

**ரொ**ம்பக் காலத்துக்கு முந்தி மானூர்க்கொளத்து மடையில இருந்து தண்ணி வெளிய வரலை. பாதிக்கொளம் நிறைய தண்ணி கிடக்கு. ஆனா, மடையைத் திறந்தா பாசனத்துக்குத் தண்ணி வரமாட்டேங்கு.

மடப்பாசன பத்துல (வயல்ல) நெல் பயிர் விக்கலும் சுக்கலுமா (கதிர் வெளியே வந்தும் வராமலும்) பொதிப் பயிரா இருக்கு. இந்த மாதிரி நேரத்துல தான் நெல்லு, தண்ணி நிறையக் குடிக்கும்.

மடையில இருக்குற சட்ரஸை (தண்ணீரைத் திறக்க, அடைக்க குளத்து மடையில் இருக்கும் இரும்பாலான கருவி) முழுசா திறந்து வச்சாச்சி. ஆனாலும், மடைக்கு வெளியே தண்ணி வர மட்டேங்கு.

மடைன்னா, அது ரொம்பப் பெருசு. ஒரே நேரத்துல ரெண்டு மாடுகள் முன்னும் பின்னுமா போயிட்டு வந்திரலாம். இவ்வளவு பெரிய மடையின் கண்ணை யாராலயும் லேசில் அடைச்சிர முடியாது.

மடைக்குள்ள இறங்கிப் பார்க்கிற துணிச்சலும் யாருக்கும் இல்லை. கொளத்துக்குள்ள பாதி அளவு தண்ணி தேங்கிக் கிடக்கும்போது சட்ரஸைத் திறந்தா, தண்ணி கொடுக்கிற அழுத்தத்துல எப்பேர்ப்பட்ட அடைப்பும் பிச்சிக்கிட்டுப் போயிரும். அதனால 'இது ஏதோ தெய்வக் குத்தம்'தான்னு மக்க நினைச்சாங்க. சேதியை அப்ப ஊரை ஆண்டுக்கிட்டிருந்த மகாராசா கிட்ட போய்ச் சொன்னாங்க.

மகாராசாவும் ஏரியில ஏறி, குளத்துக் கரைக்கு வந்து பார்த்தாரு. கூடி நின்ன மக்களைப் பார்த்து ராசா, "குளத்து மடையைத் திறக்க உங்கள்ல யாரு முன் வராங்களோ, அவங்களுக்கு இந்தக் கொளத்துல தலைமுறை தலைமுறைக்கும் வெளயற மீன்பாசியில (மீன் வகையறாக்கள்) நாலுல ஒரு பங்கைச் சன்மானமா எழுதித் தாரேன்"னார்.

அந்தக் கூட்டத்துல தெல்லி வீரன்னு ஒருத்தன் இருந்தான். 'தெல்லி வீரன்'ங்கறது அவனோட பட்டப் பேர். அவன் குளத்துல இறங்கி வலைவீசி மீன் பிடிக்கிறவன். அந்தக் காலத்துல கொளத்துல புடிக்கிற மீனை நாய், நரிக, பறவை, பட்சிக கை வைக்காம (எடுக்காமல்) இருக்கத் தென்னை ஈக்கியால் செஞ்ச ஒரு பெரிய பாத்திரத்த வைச்சிருந்தாக. அதுக்குத் தெல்லின்னு பேரு. அதோடு அதுல தண்ணியும் தேங்காது. அதனால மீன்களப் போட்டு வைக்க தெல்லி ரொம்பத் தோதுவா இருக்கும்.

**மீ**ன் பிடிக்கறதையே குலத் தொழிலா கொண்ட அந்தத் தெல்லி வீரன், மகாராசா முன்னால வந்து நின்னு, "இந்த மடையை நான் திறந்திருதேன். உயிரப் பணயம் வச்சித்தான் மடையைத் திறக்கணும். மடையைத் திறந்த பிறகு, நான் அனேகமா உயிரோட இருக்க மாட்டேன். அதனால நீங்க சொன்னபடி என் வம்சாவழியினருக்குத் தலைமுறை தலைமுறைக்கும் இந்தக் கொளத்து மீன் பாசியில நாலில் ஒரு பங்கு பாத்தியதை உண்டுன்னு செப்புப் பட்டையும் எழுதிக் கொடுத்திரணும்"னு சொன்னான்.

மகராசாவும் ஊர் மக்க முன்னாடி 'சரி'ன்னு சொல்லிட்டார். உடனே, தெல்லி வீரன், குருவித்தலை (தண்ணீரின் அளவைக் காட்ட உதவும் கல்தூண்) பக்

**கழனியூரன்**





சமா போய் மூங்கி, நேரே மடைக்குள்ள போனான். உள்ள இருந்து வார வீச்சத்தை வச்சே, மடையை அடைச்சிக்கிட்டு இருக்கிறது இன்ன சங்கதிதான்னு தெரிஞ்சிக்கிட்டான்.

தண்ணியில இருந்து மேல வந்தான். குளத்தை விட்டு மேல வந்தவன்ட்ட மகராசா "என்னப்பா... சங்கதி, மடையை என்னது அடைச்சி வச்சிருக்கு"ன்னு கேட்டார்.

மகராசா, "ஒரு பெரிய மலைப் பாம்பு போய் உள்ள வசமா மடைக்குள்ள மாட்டிக்கிட்டு இருக்கு. அதால முன்னையும் போக முடியல. பின்னயும் போக முடியல; இன்னைக்குப் பொழுது இருட்டறதுக்குள்ள மடையைத் திறந்துவிட்டிருதேன். மடை தெறந்த பிறகு அனேகமா நான் உயிரோட வெளிய வாரது அந்த ஆண்டவன் சித்தம்தான். என் உயிருக்கு ஆபத்தாகி நா போயிட்டா, என்னயிந்த மடைப் பக்கத்துலயே கரை ஓர புளிய மரத்தடியில் புதைச்சிடுங்க"ன்னு சொல்லிட்டு வீட்டைப் பார்த்துப் போனான் தெல்லி வீரன்.

**சா**யங்காலம் தெல்லி வீரன் குளத்து மடைக்கு வந்தான். அவன் கையில ஒரு இரும்பாலான வலை இருந்திச்சு. அந்த வலையைச் சுத்தி சின்னச் சின்னதா கத்திகள் வைச்சுக் கட்டப்பட்டிருந்திச்சு. தன்னோட மச்சினனைக் கூப்பிட்டு, என் உடம்பு மேல இந்த இரும்பு வலையைப் போட்டுக் கட்டு"ன்னான். மச்சினனும் தெல்லி வீரன் சொன்னபடிக்கே செஞ்சான்.

இப்ப தெல்லி வீரனோட உடல் முழுகம் ஒரு கவசம் மாதிரி இரும்பு வலை சுத்தி இருந்துச்சு. அந்த இரும்பு வலையில் நூற்றுக்கணக்கான சிறிய கத்திகள் வெளியே நீட்டியபடி கட்டப்பட்டிருந்திச்சு. தெல்லி வீரன் எல்லோரையும் கையெடுத்துக் கடைசியா ஒரு முறை கும்பிட்டுட்டு, குளத்துக்குள்ள இறங்கி,

குருவித்தலை ஓரமா மூங்கினான்.

தெல்லி வீரன் மடைக்குள்ள போயி ஒரு நாழிய நேரத்துக்குப் பெறகு, புற மடையில முதல்ல ரெத்தமா ஒழுகிச்சு. அப்புறம் செத்த நேரம் கழிச்சு ஒரு பெரிய மலப்பாம்போட தலை வெளியே தெரிஞ்சது.

**பொ**ழுது அடையவும், நிலா உதிக்கவும் மடைக்குள்ள இருந்த மலப் பாம்பு மெல்ல கொஞ்சங் கொஞ்சமா வெளிய வர ஆரம்பிச்சது. பாம்பு மேலெல்லாம் ரெத்தக்களரி கத்திக் காயம். மலப்பாம்போட தெல்லி வீரன் கட்டிப் பிடிச்சி மடைக்குள்ளயே உருண்டிருக்கான்னு தெரிஞ்சது. அந்தப் பாம்பு உடம்புல, தெல்லி வீரன் கட்டி இருந்த இரும்பு வலையில உள்ள சின்னச் சின்ன கத்திக கத்தியிருந்திச்சு. மடைய விட்டுப் பாம்பு வெளியே வரவும் குளத்துத் தண்ணி வெளிய பீறிக்கிட்டு வர ஆரம்பிச்சது. தண்ணி வந்த வேகத் துல பாம்பும் மடையை விட்டு வெளியே வந்துச்சு.

நாலாளு உசரத்துக்கு, ஒரு பனை மரத் தண்டிக்கு இருந்த அந்தப் பாம்பைப் பார்த்து அங்க கூடி நின்னவங்களெல் லாம் மூக்கு மேல விரலை வச்சாங்க. மடையை விட்டு வெளிய வந்த பாம்பைப் பிடிக்கிற துணிச்சல் யாருக்கும் இல்லை. சம்சாரிகளுக்கு மடை திறந்து வெள்ளம் வந்த சந்தோசம் ஒரு பக்கம் இருந்தாலும், மடையைத் திறக்க மடைக்குள்ளாற போன தெல்லி வீரனைக் காணோ மேன்னு கவலைப்பட்டாங்க.

**ம**லப்பாம்பு முழுசா வெளிய வந்த பெறகு தெல்லி வீரன், அந்தப் பாம்போட வாலைப் பிடிச்சிக்கிட்டு மடைக்குள்ள இருந்து குளத்துத் தண்ணியோட தண்ணியா வெளிய வாரான். அவன் மேலெல்லாம் அப்பளமா நொறுங்கிப் போய் இருந்திச்சு. உடம்பெல்லாம் கத்திக் காயம். அவன் வலையோட கட்டிக் கிட்டுப்போன கத்திக அவனையே குத்தி உயிர எடுத்துடுச்சு.

"சம்சாரிகளுக்குப் பாசனத் தண்ணிக் காக மடையைத் திறக்கத் தன் உயிரையே பணயமா வச்சி, மலப்பாம்போடு போராடிச் செத்த தெல்லி வீரனை அவன் விருப்பப்படியே அவன் சொன்ன இடத்தில் புதைச்சிருங்க"ன்னு உத்தர விட்டார் மகாராசா. தெல்லி வீரனை அடக்கம் பண்ணும்போது மகாராசாவும் வந்திருந்து மரியாதை செஞ்சாரு.

கொஞ்ச நாள் கழிச்சி ஊர் மக்கள் வேண்டிக் கேட்டுக் கிட்டதால, தெல்லி வீரனைப் புதைச்ச இடத்துல ஒரு கோயிலைக் கட்டி மீன்பாசி வரவு செப்புப் பட்டயமும் எழுதிக் கொடுத்தாரு மகா ராசா. இன்னும் அந்த ஊர் மக்களும் சம்சாரிகளும் குளத்தை நம்பி வாழுற வன்னி யர் சமுதாயத்தைச் சேர்ந்த வங்களும் தெல்லி வீரனை காவல் தெய்வமா கும்பிட் டுக்கிட்டு வாராக"ன்னு தெல்லி வீரன் சாமி கதையைச் சொல்லி முடிச்சாரு வீரகேரளம் புதூரைச் சேர்ந்த இராமர்.

(தொடரும்)



## நீர்க் காவல் தெய்வம்

**தி**ருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள இரண்டாவது பெரிய குளம் மானூர்க்குளம். திருநெல்வேலியில் இருந்து சங்கரன் கோவில் செல்லும் பாதையில் உள்ளது. இக்குளத்தின் பெரிய மடையின் பக்கத்தில் குளக்கரையின் ஓரமாய் உள்ளது தெல்லி வீரன் கோயில். ஊர்க்காவல் தெய்வம் போல், இச்சாமி நீர்க் காவல் தெய்வமாய் இப்பகுதி மக்களால் வணங்கப்படுகிறது.



• திருமாவளவன்

# மருந்தில்லா மருத்துவம்!

மருந்து, மாத்திரைகள் இன்றி, மருத்துவ உபகரணங்கள் இன்றி ஒரு நோயாளியைப் பூரணமாகக் குணப்படுத்திவிட முடியும். 'ஆச்சர்யமாக இருக்கும். ஆனால் பிராண சிகிச்சை மூலம் இது சாத்தியம்' என்கிறார்கள் பிராண சிகிச்சையாளர்கள்.

சரி, பிராண சிகிச்சை என்பது என்ன? மனித உடல் ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம் என இரு வடிவங்களாக அமைந்துள்ளன. இதில் ஸ்தூல சரீரம் நம் பார்வைக்குத் தெரியக்கூடியது. நம் உடலின் ஸ்தூல சரீரமான சக்தி மண்டலம் பாதிப்படையும் போதுதான் உடல் நோய்வாய்ப்படுகிறது. பாதிக்கப்பட்ட சக்தி மண்டலத்தின் தீய சக்திகளை அகற்றிவிட்டு, நல்ல சக்தியை இம்மண்டலத்துக்குள் புகுத்தி நோயைக் குணப்படுத்துவதே பிராண சிகிச்சை.

மாஸ்டர் சோவா கோக் சூயி என்ற பிலிப்பைன்ஸ் நாட்டவர்தான் உலகம் முழுதும் இந்த சிகிச்சை குறித்து பயிற்சி அளித்து வருகிறார். ஆனால், இம்மருத்துவ முறை தோன்றியது நம் இந்தியாவில் தான்.

இதன் மூலம் சிறுநீரகக் கல், அல்சர், இரத்தக் கொதிப்பு, சர்க்கரை நோய் போன்றவற்றை குணப்படுத்தலாம். திருச்சி மாநகரில் இந்தப் பயிற்சியினைப் பெற்ற நானூறு பேரில் முப்பது, நாற்பது பேர் தற்போது தொடர்ந்து சிகிச்சை அளித்து வருகிறார்கள். திருச்சி பாய்லர் தொழிற்சாலையில் பணிபுரியும் கமலாவும், திருமாவளவனும் இச்சிகிச்சை அளிப்பதில் குறிப்பிடத்தக்கவர்கள்.

"சுப்ரமணியன்னு ஒருத்தர், சம்மணம் போட்டுத் தரையில உட்கார்ந்தா வலது காலில் வலி வருதுன்னு என்கிட்ட வந்தார். பிராண சிகிச்சை பெற்ற பின்னாடி பூரணமா குணமாயிட்டாரு. நிர்மலான்னு ஓர் அம்மாவுக்குத் தீராத தலைவலி. மூணு மாசம் தொடர்ந்து சிகிச்சை எடுத்துட்டாங்க. இப்போ நிம்மதியா இருக்காங்க" என்கிறார் கமலா.

''பிராண சிகிச்சையின்போது நோயாளி கண்களை மூடிக்கொண்டும், உள்ளங்கைகளை விரித்து வைத்தும், மூடிய வாய்க்குள் நுனி நாக்கு மேலண்ணத்தைத் தொட்டபடியும் இருக்க வேண்டும். சாதாரணமாக ஓர் அமர்வு என்பது குறைந்தது இருபது நிமிடங்கள். சில சமயங்களில் ஒரு மணி நேரம்கூட சிகிச்சை நீடிக்கும். வாரத்துக்கு இரண்டு, மூன்றென இருபது முப்பது அமர்வுகளில் பூரண குணம் பெற்றுவிடலாம்'' என்கிறார் திருமாவளவன்.

- திருநாவு



• பிராண சிகிச்சையளிக்கிறார் கமலா (இடது)...

# "தனுஷோடு நடிக்கப் போறேன்!"

ஹேர் ஸ்டைலை மாற்றி ரொம்ப வித்தியாசமான கெட்டப்போடு இருந்த சிம்புவிடம் 'என்னங்க இது கூத்து'ன்னு ஆரம்பிச்சதும் ''என்ன இப்படிக் கேட்டுட்டீங்க, விஜய் சார் பார்த்துட்டு 'ரொம்ப அழகா இருக்கு சிம்பு. இதே ஹேர் ஸ்டைல்ல ஒரு படம் பண்ணிரு'ன்னார். விக்ரம் சாரும் அதையே சொன்னாரு'' என்றவரிடம் நம் பணியினைத் தொடங்கினோம்...

'மன்மதன்' மாதிரி இன்னொரு நல்ல திரைக்கதையை எப்போ தருவீங்க?

''அதுக்குத்தான் தயாராயிட்டு இருக்கேன். நான் எழுதும் திரைக்கதைக்கு, நந்தகுமார் டைரக்ட் பண்ணப் போறார். படம் பேரு 'கெட்டவன்'. மன்மதனைவிட பெரிய அளவுக்குக்



கெட்டவனும் பேசப்படுவான்."

**'கெட்டவன்'னு நெகடிவான டைட்டில் ஏன்?**

"மனுஷனா பொறக்குற ஒவ்வொருத்தருக்குமே தான் நல்லவனா இருக்கணும்னுதான் ஆசை. ஆனா, நம்மைச் சுத்தி எத்தனை மோசமான மனிதர்கள் இருக்காங்க! கெட்டவனாகணும்னு யாரும் விரும்பி மாறுறதில்ல. ஏதோ ஒரு சூழ்நிலை, சந்தர்ப்பம், ஒரு மனுஷனோட கோர முகத்தை வெளியே தெரிய வைக்குது. இதுதான் கெட்டவன் படத்தோட கதை. என்ன சூழ்நிலை, சந்தர்ப்பம்ங்கறதை அழகான, ஸ்ட்ராங் கான திரைக்கதையோடு சொல்லியிருக்கேன்."

"தனுஷ் - அவரோட அப்பாவித்தனமான நடிப்பு, குணம் இரண்டுமே எனக்கு ரொம்பப் பிடிக்கும். அடுத்து பரத். என்ன கேரக்டர் கொடுத்தாலும், அதுவாவே மாறிடுறார். அந்த டெடிகேஷன் எனக்கு பிரமிப்பு."

**நீங்களும் தனுஷ்ும் நண்பர்களாயிட்டீங்க, சேர்ந்து நடிப்பீங்களா?**

"என்னது நடிப்பீங்களாவா... கட்டாயம் நடிக்கப் போறேன்... எப்ப தெரியுமா? எங்களுக்கு ஏத்த மாதிரி, ரெண்டு பேரோடத் திறமைக்குச் சவாலா இருக்குற

**'வல்லவன்' உங்களுக்கு 'மன்மதன்' அளவுக்குத் திருப்தியைத் தந்ததா?**

"இதுவரைக்கும் எனக்கு முழு திருப்தியை 'வல்லவனோ' 'பல்லனோ' 'மன்மதனோ' கொடுக்கல. முழு திருப்தி கெடச்சா அதுக்கப்புறம் தேடலோ, உத்வேகமோ இல்லாமப் போயிடும். 'கெட்டவன்' என் தேடலுக்கான நிறை மனிதனாக இருப்பான்."

காதலுங்கறது கருத்தாழமிக்க பாட்டு மாதிரி. ரெண்டு பேர்ல ஒருத்தர் முரண்பட்டாலும் அபஸ்வரமாயிடும்!



**மன்மதன் மொட்டையும், வல்லவன் பல்லனும் எப்படித் தோன்றினாங்க?**

"வல்லவனில் அழகாயில்லாத ஹீரோன்னு முடிவு பண்ணினோம். அழகா இல்லாதவரை எப்படி காண்பிக்கிறதுன்னு யோசிச்சபோதான் இந்தப் 'பல்லன்' உருவானார். நம்ம 'மொட்டை'யும் அப்படித்தான். படத்துல ஒரு கேரக்டரை இயல்பாவும், இன்னொரு கேரக்டரை வித்யாசமாவும் காட்டும்போது, அதுக்கு நல்ல வரவேற்பு இருக்குங்கறதைத்தான் இந்த ரெண்டு படங்களும் உணர்த்துது."

**உங்க பேட்ச் ஆர்ட்டிஸ்ட்ல உங்களைக் கவர்ந்தவர் யார்?**

மாதிரி நல்ல ஸ்கிரிப்டும், தயாரிப்பாளரும் கிடைச்சா!"

**காதலைப் பத்தி உங்கள் கருத்து என்ன?**

"அது ஒரு கருத்தாழமிக்க பாட்டு மாதிரி. ரெண்டு பேர் இணைஞ்சு, ஸ்ருதி ஒத்துப் பாட வேண்டிய பாடல். இருவரில் ஒருவர் முரண்பட்டாலும் அபஸ்வரமாயிடும். ஆகாமலிருக்க இருவருடைய சிந்தனையும், எண்ணமும் ஒரே ஸ்ருதியில இருக்கணும்!"

- மனோ

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

# புதினா பயிரிடு...

"மூன்று மாதங்களுக்கு ஒருமுறை நிகர லாபம் பதினைந்தாயிரம் ரூபாய்!"

புதினா பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? 'சமையலில் நறுமணத்துக்குப் பயன்படுத்தப்படும் ஒரு பொருள். மீறிப் போனால் துவையல், சட்னி செய்வோம்' என்றுதானே எண்ணுகிறீர்கள்! ஆனால், கரும்பு, வாழை, பருத்தி மாதிரி புதினாவும் ஒரு பணப் பயிர் என்றால் நம்ப முடிகிறதா? நெல்லை மாவட்டம் ஆலங்குளத்தைச் சேர்ந்த என்.கே.ஆர். சண்முகம் இதனைப் பயிரிட்டு வெற்றி கண்டிருக்கிறார். பணப்பயிர் பற்றிய தேசிய கருத்தரங்கு கன்னியாகுமரியில் நடைபெற்றபோது, இவருடைய சாதனை பல வேளாண் வல்லுநர்களால் பாராட்டப்பட்டிருக்கிறது. இது குறித்து அவரிடம் பேசினோம்.

"புதினாவிலிருந்து 'மென்தால்' என்னும் எண்ணெய் எடுக்கப்படுகிறது. இதன் இன்றைய தேவை 5000 டன். ஆனால், கிடைப்பதோ 3000 டன்தான். அதனால்தான் காஷ்மீரில் உள்ள புதினா தோட்டப் பயிர் ஆராய்ச்சி மையத்துக்குச் சென்று, அவர்கள் புதினா பயிரை விளைவிக்கும் நுட்பத்தைக் கற்றுக் கொண்டேன். அங்குள்ளவர்கள் 'புதினா குளிர் பகுதியில் மட்டுமே விளையும் பயிர். காஷ்மீர் மாதிரியான பகுதிகளில் உள்ள தட்பவெப்பம்தான் இதற்கு ஏற்றது. உங்கள் ஊரின் தட்பவெப்பம் 25° - 30° வரை உள்ளது. அதனால் விளையாது' என்றார்கள். ஆனால், நான் அவர்களின் வார்த்தைகளில் நம்பிக்கை இழக்காமல், அங்கு முழுமையாகப் பயிற்சி பெற்றேன். அப்போது தென்னகத்தில் புதினாவை விளைவிக்கக்கூடிய அதிகபட்ச சாத்தியக்கூறுகள் பற்றி அங்குள்ள விஞ்ஞானிகளிடம் விவாதித்தேன்.

இங்கு வந்து தென்காசி, ஆலங்குளத்துக்கு அருகிலுள்ள மாறாந்தையில் 100 ஏக்கரில் புதினாவைப் பயிரிட்டேன். சொட்டு நீர்ப்பாசன முறையைப் பயன்படுத்தினேன். எளிதில் தண்ணீர் வடியும் மண்ணாக, நன்கு சூரிய வெளிச்சம் விழும் பகுதியாகப் பார்த்துப் பயிர் செய்தேன்.

தென்னகப் பகுதியில் புதினா பயிர் செய்யும் காப்புரிமையை காஷ்மீர் புதினா ஆராய்ச்சி மையம் எனக்கு அளித்துள்ளது" என்றவரிடம், 'புதினா இலாபகரமான பயிரா?' என்றோம்.

"இது ஒரு பணப்பயிர். ஒரு ஏக்கரில் விவசாயம் செய்தால், மூன்று மாதத்துக்கொருமுறை நிகர லாபமாக பதினைந்தாயிரம் கிடைக்கும். புதினா மருத்துவச் செடி என்பதால் பூச்சி, நோய்த் தொல்லைகள் இருக்காது.



உரங்கள் அதிகம் போடத் தேவையில்லை. காஷ்மீரில் குளிர் காலங்களில் கடும் பனிப்பொழிவு காரணமாக மூன்று மாதங்கள் பயிர் செய்ய முடியாது. ஆனால் நம்மூரில் பன்னிரண்டு மாதங்களும் பயிர் செய்யலாம்'' என்றவர், புதினாவின் விலை நிர்ணயம் குறித்தும் விளக்கினார்.

"தினம் தினம் தங்கம், வெள்ளிக்கு அடுத்து உலகமெங்கும் மென்தால் எண்ணெயின் விலைதான் அறிவிக்கப்பட்டு வருகிறது. நாளுக்கு நாள் அதன் தேவை அதிகமாகிக் கொண்டே இருக்கிறது. மருந்து தயாரிப்பாளர்கள், ஒப்பனைப் பொருள் தயாரிப்பானர்கள், சாக்லெட் தயாரிப்பாளர்கள் போன்றவர்களுக்கு மென்தாலின் தேவை அதிகம் உள்ளதால், புதினா பயிரின் தேவையும் எப்போதும் இருக்கும். புதினாவில் ஒருமுறை முதலீடு செய்தால், தொடர்ந்து பலன் அடைய முடியும். ஏனென்றால் கீரை போன்று இலையை மட்டும்தான் பறித்து எடுக்கிறோம். எனவே குறைந்தபட்ச முதலீட்டில் அதிக இலாபம் பெறலாம்'' என்கிறார் சண்முகம் நம்பிக்கையோடு.

*செய்திச் சித்திரம் :*
**த.இ.தாகூர்**

• சண்முகம்

# லாபத்தை அள்ளிடு!

# தொடர்கதை



குவார்ட்டர் விட்டதுபோல கிர்ரென்றிருந்தது முத்துராமனுக்கு. ஆல்பர்ட் தியேட்டரில் டிக்கெட் வாங்கியிருக்கிறோம் என்று நண்பர்கள் சொன்னபோது, உடனே சாந்தியின் ஞாபகம் வந்தது பெரிய விஷயமில்லை. தியேட்டர் வாசலில் அவளைச் சந்திக்க நேர்ந்ததில் தான் அவன் திக்குமுக்காடிப் போயிருந்தான்.

பார்த்ததும் உடனடியாக ஒரு புன்னகை அரும்பியது. ஆனால் அடுத்த கணம் என்ன பேசுவது என்று புரியாமல் சற்றுத் திணறிவிட்டான்.

அவனது திணறலை சாந்தி மிகவும் ரசிப்பதுபோல் பட்டது. அவளும் யாரோ ஒரு பெண்ணுடன்தான் வந்திருந்தாள். எதற்கும் இருக்கட்டும் என்று முத்துராமன் அவசரமாக, 'ஒரு நிமிஷம்' என்று அவளிடம் சொல்லிவிட்டு, தன்னுடன் வந்திருந்த நண்பர்களைத் தள்ளிக்கொண்டு பத்தடி பின்னால் போனான்.

"மாப்ள, இவதாண்டா... இவளத்தான் போய்ப் பாத்துட்டு வந்தேன். ஜனவரில கல்யாணம்னு சொல்லியிருக்கு."

"கொய்யால... கணக்காத்தான் இங்க படம் பாக்க வந்திருக்க" என்று சந்தோஷத்தில் அவன் தோளைத் தட்டி, "அண்ணிய அறிமுகப்படுத்தி வெச்சிருடா... அப்பால மறந்துடப் போறாங்க" என்றான் கதிர்.

சட்டென்று முத்துராமனுக்குப் பேசுவதற்கு ஒரு விஷயம் அகப்பட்டுவிட்டது போலத் தோன்றியது. 'வா' என்று அவர்களைத் தள்ளிக்கொண்டு அவளருகே போனான்.

"சாந்தி... இது கதிரு. என் சிநேகிதன். இவன் ரஜினி ராம்கி. அவன் ஜெயச்சந்திரன்.."

"டேய், போரும்டா... நீ பேசிட்டிரு. நாங்க அங்க நிக்கறோம். படம் ஆரம்பிக்க பத்து நிமிஷம்தான் இருக்கு" என்று சந்தர்ப்பம் அறிந்த ஒருவன் திரும்பி நடந்தான். நண்பர்கள் சிரித்தபடி நகர்ந்து போனார்கள்.

முத்துராமன் கண்டிப்பாக அப்படியொரு சந்தர்ப்பத்தை எதிர்பார்க்கவில்லை. சினிமா பார்த்து ரொம்ப நாளாகிவிட்டது என்று கட்டாயப்படுத்தி அவனது நண்பர்கள் அழைத்து வந்திருந்தார்கள். தலைவர் படம். கண்டிப்பாக வெகு சீக்கிரம் அரசியலுக்கு வந்துவிடுவார் என்று எல்லோரும் ஆருடம் சொல்லிக்கொண்டிருந்த தலைவர். தனிக் கட்சியா, இருப்பதில் ஒன்றா என்று தெரியவில்லை. சில சந்தர்ப்பங்களில் அந்த விவாதங்கள் நடந்தபோது முத்துராமன் கருத்துச் சொல்லியிருக்கிறான். வருவதும் வராததும் அவர் இஷ்டம். அவருக்காகத் தான் புதிய கட்சியில் சேர முடியாது. ஆனால் படம் வெளியாகும் போது முதல் நாள், முதல் காட்சி பார்க்கிற வழக்கத்தில் மாறுதல் இருக்காது.

அவனுக்கு அவனுடைய அம்மாவும் சித்தப்பாவும் பல சமயம் அந்தக் கதையைச் சொல்லியிருக்கிறார்கள். மாநகராட்சி மருத்துவமனையில் அவன் பிறந்தபோது, சொந்தக்காரப் பெண்கள் ஆளுக்கொரு கைத்தறிப் புடைவையை மடித்துக் கையில் வைத்துக்கொண்டு குழந்தையை எடுத்துக்கொள்ளத் தயாராக நின்றுகொண்டிருந்தார்கள். டாக்டரம்மா அவனை ஒரு பூச்செண்டு போல் ஏந்தி எடுத்துக்கொண்டு வெளியே வந்தபோது, எங்கிருந்தோ வேகமாக ஓடிவந்தார் அவனுடைய தந்தை.

"ஒரு நிமிசம், டாக்டரம்மா."

பாய்ந்து வந்தவரது கையில், புத்தம் புதிய கட்சிக் கொடி. "குழந்தைய என் கிட்ட குடுங்க. எம்புள்ள மவராசன் மேலே மொத மொத இந்தக் கொடிதான் படணும்."

யாரும் எதிர்பார்க்கவில்லை. கட்சிக்

**பா.ராகவன்**



காரக் குடும்பம்தான். தீவிரத் தொண்டர் வம்சம்தான். ஆனாலும் பிறந்த குழந்தையைக் கொடியில் ஏந்தும் அளவுக்கா விசுவாசம் இருக்கும்!

"விசுவாசமில்ல, டாக்டரம்மா... எங்க சுவாசமே இதுதான்." முத்துராமனின் தந்தை, கையில் கிடந்த குழந்தையைத் தூக்கி நெற்றியில் முத்தமிட்டுத் தலைவரின் பெயரைக் காதில் சொல்லி, 'வாழ்க' என்றபோது டாக்டரம்மா சிரித்தார்.

"கட்சியெல்லாம் இருக்கட்டுங்க. புள்ள பொறந்திருக்கான். நல்லா படிக்க வைங்க மொதல்ல. படிச்சுப் பெரியாளாவட்டும்."

"அ... அதெல்லாம் கரீட்டா செஞ்சிருவம்ல. எத்தினி படிச்சாலும் எம்புள்ள எங்க கட்சிதான். என்னால போவ முடியாத உயரத்துக்கு அவன் போவப் போறான் டாக்டரம்மா. பாத்துக்கினே இருங்க. இதே ஆசுபத்திரிய இன்னும்

# கொசு

நடிகை சினேகா உட்கார்ந்து கொண்டிருக்கிறார். அவர் முன்னால் நின்று அவருக்காக இருவர் பாடுகின்றனர். இன்னொருவர் டான்ஸ் ஆடுகிறார்; மற்றொருவர் காதல் மொழி பேசுகிறார். அனைத்தையும் புன்சிரிப்புடன் பார்த்துக் கொண்டிருக்கிறார் சினேகா.

'இது என்ன கூத்து?' என்று திகைக்காதீர்கள். எஸ்.எஸ்.மியூசிக்கில் 'சினேகாவுக்காக எதுவும்' என்று ஒரு நிகழ்ச்சி.

"இதெல் லாம் பைத்தியக்காரத்தனமாக இல்லையா உங்களுக்கு?" என்று சினேகாவிடமே கேட்டபோது, தன் டிரேட் மார்க் புன்னகை ஒன்றை உதிர்த்துவிட்டு, "இதெல்லாம் சும்மா... பொழுதுபோக்கு, ஃபன். என் ரசிகர்களைச் சந்தித்து, அவர்களுடன் நேரடியாகப் பேச ஒரு வாய்ப்பு. அவர்களும் இதை எல்லாம் சீரியசாக நினைக்கவில்லை; நானும் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை. இன்னும் சொல்லப்போனால் மேடையேறி பாட, பேச, டான்ஸ் ஆட அவர்களுக்கு ஒரு வாய்ப்புக் கிடைக்கிறது. அவர்களின் தன்னம்பிக்கை வளர்க்கும் முயற்சி இது!'' என்றார்.

---

பெரிசா மாத்திக்கட்டித். தெறப்பு விழாவுக்கு அவன் வந்து குத்து விளக்கேத்துவான்!"

என்னென்னவோ பேசினார். பேசிக்கொண்டே இருந்தார். மனத்தில் முட்டி மோதிக்கொண்டிருந்த மகிழ்ச்சிக்கு சொற்களும் அர்த்தமும் முக்கியமில்லை. வெளிப்பாடு போதும். அவர் கண்ணில் தெறித்த பரவசம் டாக்டருக்குப் புரிந்தது. 'ஆல் தி பெஸ்ட்' என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டார்.

முத்துராமன் பலமுறை கேட்ட அந்தக் கதை இப்போது நினைவுக்கு வந்தது. ஏனோ அதை சாந்தியிடம் சொல்ல வேண்டும் போலிருந்தது. ஏதாவது பேச விரும்பினான்.

அன்பாகத் தன்னைப் பற்றிச் சொல்லலாம். அவளைப் பற்றியும் கேட்கலாம். உட்கார்ந்து பேச அவகாசமில்லை. நண்பர்கள் கிண்டல் செய்ய ஆரம்பித்துவிடக் கூடும். ஆனால் சடாரென்று கட்சிக் கொடியில் தன்னை வாங்கிக்கொண்ட தந்தையிடமிருந்தா தொடங்க முடியும்?

"எப்படி இருக்கே? படம் பாக்க வந்தியா?"

"இல்ல... எந்தங்கச்சி இங்க பாப்கார்ன் சப்ளை பண்ண வந்தா. அவளக் கூட்டிக்கினு போவலாம்னு வந்தேன்."

"அட, பாப்கார்ன் பிசினஸ் பண்றீங்களா?"

"இல்லல்ல... செட்டியார் வூட்ல செஞ்சி பாக்கெட் பண்ணிக் குடுப்பாங்க. இவ எடுத்தாந்து இங்க போட்டுட்டுப் போவா. கூடமாட இருந்தா அஞ்சு பத்து கிடைக்கும்ல?"

தியேட்டர் வராந்தாவில் ஐஸ்க்ரீம் கடை அவன் கண்களில்பட்டது. அவளை அழைத்துப் போய் கோன் ஐஸ் வாங்கித் தரலாமா என்று நினைத்தான். ஏதாவது நினைத்துக்கொண்டு விட்டால்...

"கலர் குடிக்கிறியா?" என்று கேட்டான்.

"ஐயே... அதெல்லாம் வாணாம். நான்.. நான் வந்து.." அருகே சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்த அவளது தோழி, ரகசியமாகச் சிரிப்பதுபோலப் பட்டது.

"உன் ஃப்ரெண்டுக்கும் சேர்த்துத்தான் சொல்றேன்."

"எலேய் மாப்ள... சைக்கிள் கேப்புல எங்கள மறந்துராத... சைதாப்பேட்டைலேர்ந்து உன்னிய வெச்சி மிதிச்சிக்கிட்டு வந்திக்கோம்... அது நெனப்புல இருக்கட்டும்.."

பின்னாலிருந்து நண்பர்கள் குரல் கொடுத்தார்கள். அவனுக்குச் சந்தோஷமாகத்தான் இருந்தது. கடவுளுக்கு நன்றி. இது எதிர்பாராதது. அர்த்தமற்ற சந்திப்புதான் என்றபோதும் ஆனந்தமாக இருக்கிறது. வெட்கப்பட்டுக் கொண்டு அவள் ஓடிவிட்டாலும்கூட சந்தோஷத்தில் குறைவிருக்காது என்று தோன்றியது. ஆனால் சாந்தி அநாவசியமாக வெட்கப்படுகிற பெண்ணாகத் தெரியவில்லை. தைரியமாகத்தான் இருந்தாள். முகத்தை நேருக்கு நேர் பார்த்துத்தான் பேசினாள். அவனுக்குத்தான் குறுகுறுவென்றிருந்தது.

"நாளைக்கு எங்கப்பா உங்க வீட்டுக்கு வருவாரு. நாள் பாத்திருக்காங்க. நீங்க சொன்னாப்புல ரெண்டு மூணு முகூர்த்த நாளா பாத்திருக்கு. உங்களுக்கு எது வசதின்னு கேட்டுக்கிட்டுச் செய்யலாம்னு..."

முத்துராமனுக்கு நெஞ்சு வரைக்கும்

நூற்றுக்கணக்கான ரசிகர்களிலிருந்து திறமையின் அடிப்படையில் ஆறு பேர் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அவர்களுள் நீச்சல், மெதுவாக பைக் ஓட்டுவது என்று ஐந்து சுற்றுகளில் ஐந்து பேர் விலக்கப்பட்டு, இறுதியாக வெல்பவருக்கு ஒரு மோட்டார் பைக் பரிசு. போனஸ்: சினேகாவுடன் உரையாடியபடி, நட்சத்திர ஓட்டலில் டின்னர்.

- மானஸா



வார்த்தை வந்துவிட்டது. எது வசதி? இப்போதே திருமணத்தை முடித்துவிடலாம். ஆல்பர்ட் தியேட்டர் வாசல். பின்னணியில் அவன் மனத்துக்குப் பிடித்த நடிகரின் மாபெரும் கட் அவுட். மக்கள் கூட்டத்துக்குக் குறைவில்லை. கூடி நிற்கச் சொல்லி ஒரு குரல் கொடுத்தால் கண்டிப்பாகக் கூடிவிடுவார்கள். நடுச் சாலையில் திருமணம். பக்கத்தில்தான் தினத்தந்தி அலுவலகம் இருக்கிறது. செய்தி பரவி யாராவது நிருபர் வந்து படமெடுத்துக்கொண்டு போனாலும் வியப்பதற்கில்லை. அந்தப் பட்சத்தில் சாந்தியையும் கட்சி மாநாட்டுக்கு அழைத்துச் சென்றுவிடலாம்.

ஆனால், 'நீ வருவியா?' என்று கேட்டபோது 'மாட்டேன்' என்று தலையசைத்துவிட்டாள்.

"ஏன்? அரசியல் பிடிக்காதா உனக்கு?"

'தெரியாது' என்று பதில் சொன்னாள். "நமக்கெதுக்குங்க அதெல்லாம்? வேளைக்கு சோறு கிடைக்கறது பெரிய விஷயம். அப்பாவால இப்பல்லாம் முன்ன மாதிரி மீன்பாடி வண்டி மிதிக்க முடியறதில்ல. கால் நோவுதுங்கறாரு. மோட்டார் வெச்ச சைக்கிள் ரிக்ஷா வாங்கணும்னு ஆசைப்படறாரு. பணத்துக்கு எங்க போவறது? பணம் சம்பாரிக்கறதுக்குக்கூட மொதல் போடக் கொஞ்சம் பணம் வேண்டியிருக்குது. யோசிச்சுப் பாத்தா கோழிலேர்ந்து முட்டை வந்ததா, முட்டைலேர்ந்து கோழி வந்ததாங்கற மாதிரி இல்ல?"

முத்துராமனுக்குப் பெரிய ஆச்சர்யமாகப் போய்விட்டது. என்னமாய்ப் பேசுகிறாள் இவள்! சாதாரண சொந்த சோகக் கதை. ஆனால் எத்தனை பெரிய தத்துவங்கள் அடங்கியதாக அமைந்துவிட்டது!

"கவலப்படாத சாந்தி... எல்லாம் சரியாயிரும். சரியாக்கிரலாம். எங்க ஏரியா வட்டச் செயலாளரு நமக்கு ரொம்ப வேண்டப்பட்டவரு... இந்த வருஷம் ரெண்டுல ஒண்ணு எதனா நல்லது செஞ்சே திருவாரு... கொஞ்சம் பொறுத்துக்க..." என்று நம்பிக்கை தரும் விதத்தில் பேசினான்.

"ஐயே... அதுக்குள்ள மாமனாரு மேல அனுதாபம் வந்திரிச்சாக்கும்..."

சடாரென்று வந்துவிட்ட அவளது கேலியும் அவனுக்குப் பிடித்திருந்தது. யோசித்துப் பார்த்தபோது, தன்னுடைய பதில் சற்றே பொருந்தாத் தொனியில்தான் வந்திருக்கிறது என்பது புரிந்தது. சிரித்தான்.

"எலேய் மாப்ள... பெல்லடிச்சிட்டான். படம் பாக்க வரியா? இல்ல, படம் காட்டிக்கினே இருக்கப் போறியா? நாங்க போறோம்."

"வரட்டுமா சாந்தி?"

அவள் தலையசைத்தபோது வேகமாக யாரோ ஓடி வந்து அவளை மோதுவது போல் நிற்க, முத்துராமன் திரும்ப இருந்தவன் ஒரு கணம் தயங்கினான்.

"சாந்தி, இங்கயா இருக்க... உன்ன உங்கப்பாரு தேடிக்கிட்டிருக்காரு. குப்பத்துல எவனோ நெருப்பு வெச்சிட்டான்டி... ஆறு குடிசை எரிஞ்சிருச்சு... சீக்கிரம் ஓடியா..."

(தொடரும்)

# அருள்வாக்கு



# அன்பானந்தம்!

மனிதப் பிறவி எடுத்ததன் பயனே அன்பு செலுத்துவதுதான். அன்பு செலுத்துவதில் உள்ள ஆனந்தம் வேறு எதிலும் இல்லை. தனக்கென்று பொருள் சேர்ப்பதில், புகழ் சேர்ப்பதில், அலங்காரம் செய்து கொள்வதில் தாற்காலிகமாக இன்பம் கிட்டலாம். ஆனாலும் இவற்றில் உள்ளம் நிறைவு பெறுவதில்லை. உள்ளத்துக்கு நிறைவான ஆனந்தம் அன்பு செலுத்துவதிலேயே உண்டாகிறது. அன்பு செலுத்தும்போது நமக்கு எத்தனை கஷ்டம் வந்தாலும், தேக சிரமம் வந்தாலும், பணச் செலவானாலும் இதெல்லாம் தெரிவதேயில்லை. அன்பின் ஆனந்தமும் நிறைவுமே இந்தத் துன்பத்துக்கெல்லாம் மேலாகத் தெரிகிறது. அன்பு செலுத்தாத வாழ்க்கை வியர்த்தமே.

அன்பு செலுத்தும்போது துன்பமே தெரிவதில்லை என்றேன். ஆனால் கடைசியில் ஒரு நாள் அன்பு செலுத்தப்பட்ட வஸ்துவே நமக்குப் பெரிய துன்பத்தைக் கொடுத்து விடுகிறது. நாம் ஒருவரிடம் அன்பு வைக்கிறோம். கடைசியில் ஒரு நாள் அவர் நம்மை விட்டுப் போயே போய் விடுகிறார் அல்லது நாமாவது அவரை விட்டு ஒரு நாள் போகத்தான் போகிறோம்.

அன்பின் முடிவான பலன் துன்பம் தானா என்று பெரிய சலிப்பு உண்டாகி விடுகிறது.

அன்பு செய்தாலும் முடிவில் துன்பம்; அன்பு இல்லாமல் இருந்தாலோ, வாழ்க்கையில் ருசியே இல்லை. இப்படியானால் என்ன செய்வது? மாறாத, மாளாத அன்பை உண்டாக்கிக் கொள்வதே வழி. நம்முடைய அன்புக்குரிய வஸ்து நம்மை விட்டு என்றும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அப்படி ஒரு வஸ்து இருந்து, அதனிடம் அன்பை வைத்துவிட்டால் நாமும் அதுவும் ஒரு நாளும் பிரியப் போவதில்லை. எப்போதும் ஆனந்தமாக, நிறைவாக இருக்கலாம்.

அதாவது, என்றும் மாறாமல் இருக்கிற ஒரே வஸ்துவான பரமாத்மாவிடம் அன்பைப் பூரணமாக வைத்துவிட வேண்டும். பரமாத்மா நம்மைவிட்டு ஒருபோதும் நீங்குவதில்லை. நம் சரீரத்திலிருந்து உயிர் பிரிந்தாலும், பிரிகிற உயிர் பரமாத்மாவிடமிருந்து பிரியாமல் அவரிடமே கலந்துவிடும். அவரிடம் வைக்கிற அன்பே சாசுவதமாக இருக்க முடியும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

## ஜகத்குரு

# டைபாய்டு... ஏன்?

**மறுபடி ஆரம்பித்துவிட்டது டைபாய்டு சீசன். மெள்ள மெள்ள அங்கங்கே தென்படத் துவங்கி, புது வீச்சில் புறப்பட்டுவிட்டது. டைபாய்டு ஏன் வருகிறது, எப்படித் தவிர்ப்பது என்பது குறித்தெல்லாம் நம்மிடம் விளக்கினார் மைலாப்பூர் ஜெயா க்ளினிக்கைச் சேர்ந்த பொதுநல மருத்துவர் டாக்டர் சாய்ரமணன்.**

சால்மனெல்லா டைபை (Salmonella Typhy) என்னும் பாக்டீரியா கிருமியின் பாதிப்பால்தான் டைபாய்டு காய்ச்சல் வருகிறது. நோயாளியின் குடலில் இந்தக் கிருமிகள் வசிக்கின்றன. அவை மலம், சிறுநீர் மூலம் வெளியேறி மண்ணுடன் கலக்கின்றன.

அசுத்தமான இடங்களில் உட்காரும் ஈக்கள், இந்தக் கிருமிகளைத் தெருவிலிருந்து வீட்டுக்கு எடுத்து வருகின்றன. நாம் சாப்பிடும் உணவிலும் தண்ணீரிலும் அவற்றைக் கலக்கின்றன. அவற்றைச் சாப்பிடும் நபருக்கு டைபாய்டு காய்ச்சல் வருகிறது.

'நோய்க் கடத்திகள்' மூலமும் டைபாய்டு காய்ச்சல் பிறருக்குப் பரவுவது உண்டு. நோய்க் கடத்தி என்பவர் யார்? ஏற்கெனவே டைபாய்டு காய்ச்சலால் பாதிக்கப்பட்டு ஆரோக்கிய நிலைக்குத் திரும்பியவர்கள்தான் 'நோய்க் கடத்தி' என்று அழைக்கப்படுகின்றனர்.

ஒருமுறை டைபாய்டு காய்ச்சல் வந்தவருடைய உடலில், நோய் குணமான பிறகும்கூட பல மாதங்களுக்கு டைபாய்டு கிருமிகள் குறைந்த எண்ணிக்கையில் வாழ்ந்து வரும். அவருடைய பித்தப்பையில் இவை வசிக்கும். சிறிது சிறிதாக அவரது சிறுநீர் மூலமும் மலத்தின் வழியாகவும் இந்தக் கிருமிகள் அவ்வப்போது வெளியேறும். இவை அந்த நபரை ஒன்றுமே செய்வதில்லை. ஆனால், ஈக்கள் மூலமாக மற்றவர்களுக்குப் பரவும் போது டைபாய்டு காய்ச்சல் வந்துவிடுகிறது.

குழந்தைகள் முதல் முதியோர் வரை எல்லா வயதினருக்கும் வரக்கூடியது இக்காய்ச்சல். அசுத்த உணவு, தூய்மையற்ற குடிநீர், பால் இவற்றின் மூலம் உடலுக்குள் நுழையும் டைபாய்டு கிருமிகள், குடல் வழியாக இரத்தத்தில் கலந்துவிடும். அங்கு அவை பெருவளர்ச்சி பெற்று, மீண்டும் குடலுக்கு வரும். அங்குள்ள சிறுகுடலின் பாதுகாப்புப் படலமான நிணநீர்த் திசுக்களில் குடியேறித் தாக்கும். இதனால் குடல் சுரப்புத் திசுக்கள் வீங்கும். அந்த இடங்களில் வட்ட வடிவமாகப் புண்கள் உண்டாகும். இதனால் காய்ச்சல் துவங்கும்.

பொதுவாக இந்தக் கிருமிகள் உடலுக்குள் புகுந்த 10 - 15 நாட்களில் டைபாய்டு காய்ச்சல் ஆரம்பமாகும். காய்ச்சல், தலைவலி, உடல்வலி, பசி குறைவது, குமட்டல், வயிற்று வலி போன்றவை இதன் அறிகுறிகள்.

டைபாய்டைக் கவனிக்காமல் விட்டால் பல விளைவுகள் ஏற்படும். நோய் முற்றிய நிலையில் இரத்தத்தில் டைபாய்டு கிருமிகளின் நச்சுத்தன்மை வெகுவாக அதிகரித்து நிமோனியா, இதய நோய், மூளைக் காய்ச்சல், இரத்தக் குழாய் நோய்கள், பித்தப்பைக் கோளாறுகள், மூட்டு நோய்கள் போன்ற பல சிக்கல்கள் உருவாகி உயிருக்கே ஆபத்து நேரலாம். டைபாய்டு காய்ச்சலை ஆரம்ப நிலையி





# ...தற்கு? எப்படி?

...லேயே கவனித்து சிகிச்சை பெறவேண்டியது மிகவும் அவசியம்.

டைபாய்டுதான் என்று சந்தேகமின்றித் தெரிந்துகொள்ள பல பரிசோதனைகள் நமக்கு உதவுகின்றன. வைடால் பரிசோதனை, இரத்தத்தில் கிருமி வளர்ப்புச் சோதனை போன்றவை இந்தக் காய்ச்சலை உறுதிப்படுத்த உதவும்.

இன்றைக்கு நல்ல பல மருந்துகள் டைபாய்டு காய்ச்சலுக்கு உள்ளன. நோயாளி இவற்றை மருத்துவர் சொல்லும் அளவுப்படி சரியாகச் சாப்பிட வேண்டும். விட்டுவிட்டுச் சாப்பிட்டாலோ, அளவு குறைந்தாலோ அந்த நபருக்கு மறுபடியும் காய்ச்சல் வந்துவிடும்.

நோயாளிக்குத் தரப்படுகின்ற ஆகாரம் சத்து உள்ளதாகவும் எளிதில் ஜீரணிக்கக்கூடியதாகவும் இருப்பது நல்லது. அரிசிக் கஞ்சி, சாத்துக்குடிப் பழச்சாறு, பால், குளுக்கோஸ், இளநீர், திராட்சை சாறு ஆகியவற்றை ஒன்று மாற்றி ஒன்றாகத் தரலாம்.

ஒருமுறை டைபாய்டு வந்தவருக்குப் போதுமான நோய் எதிர்ப்பு சக்தி ஏற்பட்டு விடுவதால், பெரும்பாலும் மீண்டும் அவருக்கு இந்தக் காய்ச்சல் வருவதில்லை. மற்றவர்கள் இதனைத் தவிர்க்க தடுப்பு ஊசியைப் போட்டுக் கொள்ளலாம். ஒரு முறை இந்த ஊசியைப் போட்டுக் கொண்டால் மூன்று ஆண்டுகளுக்கு டைபாய்டு காய்ச்சல் வராது.

மருந்துகளை விட மிக முக்கியமானது சுய சுத்தம், சுற்றுப்புறச் சுகாதாரம். உணவைச் சரியாக சமைப்பது, சுத்தமாகப் பராமரிப்பது, தண்ணீரை நன்றாகக் கொதிக்க வைத்துக் குடிப்பது, ஈக்கள் மொய்க்காமல் உணவைப் பாதுகாப்பது, ஹோட்டல் உணவுகளைக் குறைத்துக் கொள்வது, தெருக்களைக் கழிப்பிடங்களாகப் பயன்படுத்துவதைத் தடுப்பது போன்ற சுகாதர முறைகள் தான் டைபாய்டு காய்ச்சலை முழுமையாகத் தடுக்கும்'' என்கிறார் டாக்டர் சாய்ரமணன்.

• டாக்டர் சாய் ரமணன்



- ராகவ்குமார்

சிறப்புச் சிறுகதை

# உருகும் இதயம்!

## சுபா

தன் அலுவலகத்துக்குப் புதிதாக வேலைக்கு வந்து சேர்ந்த தேன்மொழியைப் பார்த்த முதல் கணத்தில் ஷங்கருக்குள் ஏற்பட்ட சிலிர்ப்பை வார்த்தைகளால் வெளியிட முடியாது.

பாலைவனத்தின் முடிவு தெரியாமல் வாடி வதங்கி நடந்துகொண்டிருக்கும்போது நீர்ச் சாரல் முகத்தில் மோதின மாதிரி, தாங்க முடியாத சுமையுடன் மலைச் சரிவில் ஏறும்போது இதயம் வரை நனைக்கும் ஒரு குவளை சுவை நீர் கிடைத்த மாதிரி என்று என்னென்னவோ இயல்பு மீறின உவமானங்கள் எல்லாம் அவன் இதயத்தில் உலா வந்தன.

உடனே தீர்மானித்து விட்டான். அவள்தான். அவளேதான்!

தேன்மொழிக்கும் அவனிடம் ஓர் ஈர்ப்பு ஏற்பட்டு விட்டது. ஷங்கர் அறியாமல் அவனை வைத்த கண் வாங்காமல் பார்த்தாள். அவன் பேச வந்தால் ஆர்வம் காட்டினாள். காபி குடிக்க அழைத்தால் மறுப்பு தெரிவிக்காமல் கன்றுக்குட்டித் துள்ளலுடன் அவனோடு சேர்ந்து போனாள்.

முந்நூற்று அறுபத்தைந்து நாட்களுக்குள் ரசவாதம் நிகழ்ந்து விட்டது. ஷங்கர் - தேன்மொழி காதல் துளிர்த்து, தளிர்த்து, கிளை விட்டு, பூப்பூத்து, வைரம் பாய்ந்த விருட்சமாய் வேரூன்றியது.

திருமணம் செய்துகொள்ளத் தீர்மானித்தார்கள். அடுத்த முக்கிய கட்டம் வீட்டில் காதலை வெளிப்படுத்துவது.

தேன்மொழி, அம்மாவின் தோளைப் பற்றிக்கொண்டு தன் இதயத்தை ஆக்ரமித்திருந்த ஷங்கரைப் பற்றி ஒரு கவிதைபோல் சொன்னாள். தேன்மொழியின் அம்மா மல்லிகா, மகள் கொழுகொம்பு ஒன்றைத் தேடிப் படர ஆசைப்படுவதைத் தெரிந்துகொண்டாள். காதலுக்கு அவள் எதிரியில்லை. தான் பார்த்துத் தன் மகளுக்கு மாப்பிள்ளை தேடித் தந்தால் என்ன, கற்றறிந்த தன் மகள் தேடிக்கொண்டால் என்னவென்று யோசித்துத் தன்னைவிடத் தன் மகள் புத்திசாலித்தனமாக மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுத்திருப்பாள் என்ற நம்பிக்கையுடன் மகளிடம் மலர்ந்த முகத்துடன் சம்மதத்தைத் தெரிவித்தாள்.

ஷங்கர் தன் அம்மாவிடம் தேன்மொழியைப் பற்றிச் சொல்லலாம் என்று முடிவெடுத்து வீட்டில் நுழைந்த தருணத்தில், அவனது அம்மா சித்ராவின் முகத்தில் எரிச்சல் மண்டிக்கிடந்தது. அவளது கையில் ஒரு கல்யாணப் பத்திரிகை. ஷங்கரைப் பார்த்தவுடன் அந்தப் பத்திரிகையைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டாள்.

"இருடா காபி கலந்து எடுத்து வரேன்" என்று சூடான வார்த்தைகளுடன் சமையலறை நோக்கித் திரும்பப் பார்த்தாள்.

ஷங்கர் அவளைத் தடுத்தான். "யார் கல்யாணப் பத்திரிகைம்மா அது? எதுக்காக அதை இவ்ளோ ஆத்திரத்தோட கிழிச்சிப் போட்டே?" என்று கேட்டான்.

"பஞ்சாபகேசனோட பையன் கேதார்நாத்தோட கல்யாணப் பத்திரிகை. அந்தப் பையன் கொல்கத்தாவுல இன்ஜினீயர். அங்கே ஒரு பெங்காலிப் பொண்ணை லவ் பண்ணினானாம். கல்யாணமாம். பத்திரிகை கொண்டு வந்து வச்சப்போ ஷ்யாமளாவோட முகம் செத்துப் போயிருந்தது. பையனுக்குன்னு அவ நூறு பொண்ணுங்களைப் பார்த்து, 'இவ சரியா இருப்பாளா, அவ சரியா இருப்பாளா'ன்னு ஆயிரம் கணக்குப் போட்டுப் பார்த்துக்கிட்டிருந்தபோது, பையன் இந்த மாதிரி காதல்னு ஒரு இடியைத் தூக்கிப் போட்டிருக்கான். இருபத்தைஞ்சு வருஷமா பார்த்துப் பார்த்து பருப்பும் நெய்யுமா ஊட்டி வளர்த்து, லட்ச, லட்சமாப் பணத்தைக் கொட்டிப் படிக்க வச்சி, வேலையைத் தேடிக் கொடுத்த

அம்மா, அப்பாவைவிட நேத்து வந்த எவளோ ஒருத்தி எப்படிடா முக்கியமாப் போய்டுவா."

ஷங்கர் திகைத்துப் போனான். தேன் மொழியைப் பற்றி இந்த நேரத்தில் எப்படிச் சொல்வது?

எந்த நேரத்தில், எந்த மூடில் சொன்னாலும் அம்மா கல்யாணத்துக்கு ஒரு போதும் சம்மதிக்கப் போவதில்லை என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது.

எனவே, அவன் தேன்மொழியிடம், "தேன், வேற வழியில்லை. எங்க அம்மா நிச்சயம் இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிக்கப் போறதில்ல. அதனால நாம ரெண்டு பேரும் உங்க அம்மாவோட ஆசீர்வாதத்தோட திருநீர்மலைக் கோயில்ல கல்யாணம் பண்ணிப்போம். கல்யாணம் முடிஞ்ச பிறகு மாலையும், கழுத்துமா வந்து எங்க அம்மா கால்ல விழுவோம். வேற வழியில்லாம எங்க அம்மா ஆசீர்வாதம் பண்ணிடுவாங்க" என்றான்.

தேன்மொழி நிறையப் பேசி, நிறையத் தயங்கி ஒப்புக் கொண்டாள். அவளுடைய அம்மா மல்லிகாவிடம் இருவருமாகப் போய்ப் பேசி அவனையும் ஒப்புக் கொள்ள வைத்தார்கள்.



பத்திரிகை அடித்தார்கள். விடியற்காலையில் திருநீர்மலையில் கல்யாணம். முதல் நாள் இரவே ஷங்கர் வெளியூருக்கு அலுவலக வேலையாகப் போவதாக அவனது அம்மாவிடம் சொல்லிவிட்டு

தேன்மொழியின் வீட்டுக்கு வந்து விடுவதாக ஏற்பாடு.

**நா**ளைக்குக் கல்யாணம்!

தேன்மொழி வழக்கம் போல் அலு வலகம் சென்று விட்டாள். மல்லிகா மேஜை யின் மேல் இருந்த திருமண அழைப்பிதழ் களைப் பார்த்தாள். ஷங்கரின் அம்மாவுக்குத் தெரியாமல் இந்தக் கல்யாணத்தை நடத்தி வைப்பதற்கு அவளுக்கு என்னவோ போல் இருந்தது.

என்ன இருந்தாலும் பெற்ற மகன் கல்யா ணம் பண்ணிக்கொள்ளும் ஒரு காட்சியை எந்தத் தாய்தான் தவறவிட நினைப்பாள்? ஒரு வேளை ஷங்கர் தனது அம்மாவை நினைத்து வீணாகப் பயப்படுகிறானோ?

தான் போய் அவளிடம் நைச்சியமாகப் பேசி கல்யாணத்துக்கு ஒப்புக்கொள்ள வைத்து அதே திருநீர்மலைக்கு சம்பந்தி அம்மாவையும் ஓர் ஆச்சரியப் பரிசாக அழைத்து வந்து ஷங்கருக்கு எதிரில் நிறுத்தி விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

புறப்பட்டாள்.

**சி**த்ரா, மல்லிகாவை யாரென்று புரி யாமல் வீட்டுக்குள் அழைத்து உட்கார வைத்தாள்.

மல்லிகா தேன்மொழியும், ஷங்கரும் உயிருக்குயிராகக் காதலிப்பதைப் பற்றிச் சொன்னாள். ஷங்கர் அம்மாவுக்குப் பயந்து திருநீர்மலையில் கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டு பின் அவளது கால்களில் வந்து விழுவதாக இருக்கிறான் என்பதைச் சொன் னாள்.

இந்தக் காலத்தில் காதல் என்பது எவ் வளவு சகஜமான விஷயமாகி விட்டது என் பதைப் பற்றிச் சொன்னாள். மறுநாள் யாரும் எதிர்பாராதவிதமாக சித்ரா வந்து அந்தக் கல்யாணத்தை நடத்திக் கொடுக்க வேண்டும் என்று மன்றாடி வேண்டிக் கொண்டாள்.

சித்ரா, மல்லிகாவுக்கு டிகாஷன் காபி கலந்து கொடுத்து, மறுநாள் காலை கல்யா ணத்துக்கு வந்துவிடுவதாகக் கூறி அனுப்பி வைத்தாள்.

**அ**ன்று இரவு.

ஷங்கர் ஒரு பெட்டியை எடுத்துக் கொண்டு வீட்டு வாசலுக்கு வந்தான். வாசலுக்குக் குறுக்கே அம்மா படுத்துக் கொண்டிருந்தாள்.

"யாரோ தேன்மொழியாமே. அவளைத் திருட்டுத்தனமா கல்யாணம் பண்ணிக்கத் தானே ஆபீஸ் டூர்னு பெத்த தாய்கிட்டயே பொய் சொல்லிவிட்டு நீ போகப் போறே? போ. என்னைத் தாண்டிட்டுப் போ. ஆனா, மறுபடி நீ இந்த வீட்டு வாசலுக்கு வர்றச்சே என் பொணத்தை மிதிச்சுண்டுதான் வீட்டுக் குள்ளே வர வேண்டியிருக்கும்" என்றாள்.

ஷங்கர் அறுந்த திரையாக சோபாவில்

## வாருங்கள் வாசக நீதிபதிகளே!

**பரிசு ரூ.2000/-**

**எ**ப்போதும் கலைஞரின் பக்கத்தில் அமைதியாக நின்று கொண்டிருப்பவர் ஆற்காடு வீராசாமி. மனிதர் பேசவே மாட்டாரோ என்று நினைத்த காலம் போய் இன்று அவர் பேசிய ஒரு கருத்து தமிழ்நாடு முழுவதும் புகைந்து கொண்டிருக்கிறது. எதிர்கட்சிகளின் கண்டனம், பிரபலமானவர்களின் கருத்து என எங்கும் இதே பேச்சு. நீதிமன்றம் குறித்து அவரும், தி.மு.க.வினரும் சொன்னது சரியா? ஐந்து வரிகளுக்குள் 'பளிச்' என உங்கள் கருத்தை அஞ்சலட்டையில் எழுதியனுப்புங்கள். சிறந்த எட்டு வாசக நீதிபதிகளுக்கு தலா ரூ.250/- பரிசு.

கடைசி தேதி : 19.2.07



சரிந்தான். நேரம் செல்லச் செல்ல அவனுடைய செல்போன் அடித்து அடித்து ஓய்ந்தது. ஒரு தருணத்தில் ஷங்கர், தேன்மொழியை அழைத்து அம்மாவின் சத்தியாகிரகத்தைப் பற்றித் தெரிவித்தான்.

**ம**றுநாள் காலை.

அழைப்பு மணி ஒலித்தது. உருகும் இதயத்துடன் ஷங்கர் அசையாது படுத்திருந்தான். சித்ரா மகனைப் பார்த்தாள். லேசாகப் பரிதாபம் சுரந்தது.

எழுந்து சென்று கதவைத் திறந்தாள்.

தேன்மொழி நின்றிருந்தாள். கல்யாணக் கோலம். கையில் ஒரு மாலை. கழுத்தில் ஒரு மாலை. சித்ரா திகைப்புடன் பார்த்தாள். அவளை உள்ளே அனுமதிப்பதா, கூடாதா என்று அவள் தவித்த வேளையில் தேன்மொழி தன்னிச்சையாக உள்ளே நுழைந்தாள். எந்தத் தயக்கமுமின்றிப் பேசினாள்.

"உங்க மகன் உங்க ஆசீர்வாதத்தோட என்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்ங்கற ஆசையிலதான் எங்கம்மா உங்ககிட்ட கல்யாணத்தைப் பத்திச் சொன்னாங்க. அவங்களோட நல்ல மனசைப் புரிஞ்சுக்காம, லக்ஷ்மணகோடு ஒண்ணைப் போட்டு அதைத் தாண்டக் கூடாதுன்னு உங்க மகன்கிட்டே சொல்லிட்டீங்களே! இது உங்களுக்கே நல்லாயிருக்கா?

அங்க எங்க வீட்டுல 'பொண்ணோட கல்யாணம் என்னாலயே நடக்காம நின்னுடுச்சே. இனிமே அவ வாழ்க்கை என்ன ஆகுமோ'ங்கற கவலையில் அம்மாவுக்கு ஹார்ட் அட்டாக் வந்துடுச்சு. அவங்களை ஆஸ்பத்திரியில சேர்த்திருக்கேன்.

உங்க உயிரைக் காப்பாத்தறதுக்காக உங்க பையன், உங்க வீட்டுப் படியைத் தாண்டாம இருந்துட்டாரு. இன்னொரு உயிரைக் காப்பாத்தறதுக்காக நான் இந்தப் படியைத் தாண்டி உங்க வீட்டுக்குள்ள நுழைஞ்சிருக்கேன். என்னைத் தனியா வெளியே போகச் சொல்றதும், இல்லை 'இங்கயே இரு'ன்னு சொல்றதும் உங்க இஷ்டம். ஊசலாடிக்கிட்டிருக்கிற எங்கம்மாவோட உயிர் உங்க கைலதான் இருக்கு."

சித்ரா ஒரு கணம் யோசித்தாள்.

"சங்கரா, தேன்மொழி கழுத்துல தாலியைக் கட்டி, மாலையை மாத்திக்கடா. வா எல்லாருமா சேர்ந்து சம்பந்தி அம்மாவைப் பார்க்கப் போவோம். நீயும், உன் பெண்டாட்டியுமா அவங்க கால்ல விழுந்து ஆசீர்வாதம் வாங்கிக்குங்க." ●

• அன்பு ஸ்குவாட்!...

• அனுதாப அழகி!

• அகந்தைத் திரை?

# ஆயிரம் கோடியில் கூவம் சுத்தமாகிவிடுமா?

● எஸ்.டி.எஸ்.கோவிந்தராஜன், கோவை - 9

*? வருமான வரிச் சோதனையில் ஏதாவது கண்டுபிடிக்கப்பட்டால் வரியோ, அபராதமோ கட்டினாலே போதுமே - எதற்காக கருணாநிதியையும் அவரது குடும்பத்தாரையும் திட்டித் தீர்க்கணும்; 'பதவிக்கு வந்து பழிவாங்குவேன்' என்று சொல்வது அசிங்கம் இல்லையா?*

! ரொம்ப ரொம்ப அசிங்கம்தான். அதைவிடவும் அசிங்கம், வருமான வரி வசூல் – சோதனை - வழக்கு ஆகியவற்றில் அரசியல் - செல்வாக்கு - பிரபல்யம் ஆகியவற்றின் அடிப்படையில் பகிரங்கமாகப் பாரபட்சம் காட்டப்படுவது.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

*? தொடர்ந்து ஐம்பதாண்டு காலம் சட்டமன்ற உறுப்பினராக இயங்கி சேவை புரிந்த சாதனைக்காக கலைஞருக்கு விழா எடுக்கப் போகிறார்களாமே?*

! உண்மையிலேயே பாராட்டப்படவேண்டிய சாதனைதான். பொன் விழா கால அனுபவம் அவரை கனிந்த, முதிர்ந்து பக்குவப்பட்ட தலைவராகப் பேச வைக்கத் தொடர்ந்து பிரார்த்திப்போம்.

● இளையராஜா, எஸ்.பி.புதூர். ❑

*? ராகிங் செய்தவர்களை சஸ்பெண்ட் செய்துள்ளனரே?*

! ராகிங் செய்தவர்கள் செவிலியர் ஆவதற்குப் படித்துக் கொண்டிருந்தார்கள் என்பது அதிர்ச்சி என்றால், அவர்கள் கையாண்ட ராகிங் முறைகள் பேரதிர்ச்சி. செவிலியர்கள் வக்ரபுத்தி கொண்டவர்களாக இருந்தால் அவர்களிடம் நோயாளிகள் படக்கூடிய பாட்டை எண்ணிப் பாருங்கள்... குலை நடுங்குகிறது!

● லெ.நா. சிவகுமார், சென்னை-33

*? பயங்கரவாதத்தை எதிர்த்துப் போராடுவது என்ற தமது உறுதிப்பாட்டை யாராலும் அசைக்க முடியாது என்கிறாரே முஷாரஃப்?*



! டிராஃபிக் கான்ஸ்டபின் மாடலில் உள்நாட்டு பயங்கரவாதத்துக்கு சிக்னல் காட்டி, அண்டை நாடு மீது பாயும் பயங்கரவாதத்துக்கு வழிவகுத்துத் தரும் அவருடைய உறுதிப்பாட்டை யாராலும் அசைக்க முடியாதுதான்.

● ஏ.எஸ். யோகானந்தம், கலிங்கியம்

? பொறாமையும் பழிவாங்கும் எண்ணமும்தான் உண்மையான வெடிகுண்டுகள் என்று மாதா அமிர்தானந்தமயி கூறியிருப்பதைப் பற்றி...?

! அவற்றைத் தொடர்பவை தான் ஆர்.டி.எக்ஸ். வெடிகுண்டுகள். இந்தத் தொடர் வெடிகுண்டுகளை அகற்றவும் செயலிழக்கச் செய்யவும் இவரைப் போன்ற நிறைய வெடிகுண்டு நிபுணர்கள் முன் வரவேண்டும். வருவார்கள்!



● கான்ஸ்டபிள் மாடலில்...

● கோவலன், நாமக்கல்.

? 'பராசக்தி'யின் பாதை நாத்திகத்திலிருந்து ஆத்திகத்தை நோக்கிச் செல்லும் 'புதிய பாதை' போல் தெரிகிறதே?

! அதெல்லாம் ஒன்றுமில்லை! 'பாபா காலில் தயாளு அம்மாள் விழுந்து வணங்கியது பக்தியால் அல்ல; பண்பாடு கருதியே' என்று பழைய வசனம்தான் பேசிக் கொண்டிருக்கிறது!

● அ. சுகுமார், காட்பாடி

? 'முடி கண்ணை மறைப்பதால் கலாமுக்கு நாட்டு நடப்பு தெரியவில்லை' என்று பால்தாக்கரே சீறியிருக்கிறாரே?

! தலைமுடியை ஒதுக்கி விட்டுக் கொண்டு உலகைச் சீராகப் பார்க்கலாம். அகந்தை கண்களை மறைத்தால் எதையும் எப்போதும் சரியாகக் காண முடியாது.

● எஸ். மீனா, ஸ்ரீரங்கம்

? ராமர் அமைத்த பாலத்தை உடைக்கச் சென்ற கிரேன்கள் உடைந்து விட்டனவாமே?

! கடலுக்கடியில் மிக உறுதி வாய்ந்த பாறைகளை உடைத்து அகற்ற முற்பட்டதால் வந்த வினை! கிரேன்கள் பழுது பார்க்கப்பட்டுவிட்டன.

● மு. செந்தில்குமார், திருச்சி - 102

? அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்தம் செய்து புதிய சட்டத்தை இயற்ற வேண்டுமென்று தமிழக அரசு கோரிக்கை விடுத்துள்ளதே?



● பொன்விழா பொழுதில்...



● அடாவடி விமர்சனம்!

! சுயநல அரசியல் நோக்கில் எழுந்த விபரீத சிந்தனை.

● எம். பாஸ்கர், திண்டுக்கல்

? தற்போதுள்ள சர்வதேச சூழலில் இந்தியாவுக்கு அணு ஆயுதங்கள் அவசியம் தேவை என்கிறாரே சோனியா?

# தராசு

! 'யார் அணு ஆயுதம் உற்பத்தி செய்தாலும் நாங்கள் செய்ய மாட்டோம்' என்று கூறும் மனோதிடம் மிக்க தேசத் தலைவர்கள்தான் இன்று உலக அரங்கில் கட்டாயத் தேவை. சோனியா மேடம், கொஞ்சம் யோசித்துப் பாருங்க...!

● வீ. உதயக்குமாரன், வீரன்வயல் ●

? ஆயிரம் கோடி செலவு செய்தாலும் கூவத்தைச் சுத்தப்படுத்த முடியுமா அல்லது அப்படிச் சுத்தப்படுத்திவிட்டால் மீண்டும் அசுத்தமாகாமல் இருக்குமா?

! சுத்தப்படுத்தி முடிப்பதற்குள்ளாகவே மீண்டும் அசுத்தம் சேர்ந்தவண்ணம்தான் இருக்கும். நகர சாக்கடைகளின் நீருக்கு வேறு பாதை அமைத்தாலொழிய கூவத்துக்கு நல்ல காலமில்லை.

● ஏ. ஜஹ்பர் காதர், விளாத்திகுளம்

? 'நீதித் துறையை அடிக்கடி விமர்சிக்க வேண்டாம்' என்ற கேரள முன்னாள் முதல்வர் உம்மன்சாண்டியின் அறிவுரையைப் பற்றி...?

! அடிக்கடி விமர்சித்தால் பரவாயில்லை. ஆற்காட்டார் மாதிரி அடாவடியாய் விமர்சிப்பதுதான் தப்பு! சாதகமான தீர்ப்பு வந்தால் நீதிமன்றங்களை வாழ்த்துவதும், தங்களுக்குப் பாதகமான தீர்ப்பு வந்தால் தூற்றுவதும் ரொம்ப ரொம்பத் தப்பு!

● எஸ். பக்கிரிசாமி, திருவாரூர்.

? காவிரி நடுவர் மன்ற இறுதித் தீர்ப்பு தமிழகத்துக்குப் பாதகமாக இருந்தால் அதற்கு ஜெயலலிதாவே பொறுப்பு என துரைமுருகன் கூறியுள்ளாரே...?

! இப்போ சாதகமாகி விட்டதே! அமைச்சர் கூற்றுப்படி அது 'ஜெ'வுடைய வெற்றியாகி விடுமே! முருகா! முருகா!

● கன்னிக்கோவில் இராஜா, சென்னை - 18.

? ஆட்டோ மீட்டரு?

! புது வீட்டுக்குத் திருஷ்டி பூசணிக்கா மாதிரி புது ரேட்டுக்கு ஆட்டோ மீட்டரு.

● சோம.தேவராசன், நாச்சியார் கோவில்

? 'பிக் பிரதர்' நிகழ்ச்சியில் ஷில்பா ஷெட்டிக்குக் கிடைத்த முதலிடம் குறித்து...?

! சின்னத்திரையிலும் அனுதாப அலைக்குப் பலம் அதிகம் என்று நிரூபிக்கிறது.

● வெ. ராம்குமார், வேலூர்.

? '1993 ம.தி.மு.க. ஆரம்ப கால நிலைப்பாடுகளிலிருந்து 2006 வரை வைகோவுடன் ஒரே மேடையில் நான் விவாதிக்கத் தயார்' என எல்.கணேசன் இப்போது சொல்கிறாரே...?

! ம.தி.மு.க.வைப் பிளக்கும் முயற்சி காற்றுப்போன பலூன் ஆகிவிட்ட நிலையில் இப்போது சோப்புக் குமிழ் ஊதுகிறார்.

● ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி - 8.

? ஹைதராபாத் பண்ணை நிலங்கள் பிரச்னையில் ஜெ. மாட்டிக் கொண்டிருப்பதைப் பற்றி...?

! மாட்டிக் கொள்வதும் வழக்குகளை ரப்பராக நீடிக்கச் செய்வதும் சட்டத்தின் ஓட்டைகளில் புகுந்து நழுவி விடுவதும் அவருக்கு வாடிக்கையாகி விட்டது. எனவேதான் 'சட்டத்தைவிட மனசாட்சியும் தர்மமும் உயர்ந்தவை; அவற்றுக்குப் பயப்பட வேண்டும்' என்று பெரியோர்கள் சொன்னார்கள். யார் கேட்கிறார்கள்? ●

• ஊருக்குப் பயந்து...



❑ ரூ. 100 பரிசு பெறுபவர் :
**இளையராஜா,**
1-பி, மாரப்பன் தெரு,
சந்தைப்பேட்டை புதூர்,
நாமக்கல் - 637 001.

● ரூ. 50 பரிசு பெறுபவர் :
**வீ. உதயக்குமாரன்,**
ஜாம்பவானோடை அஞ்சல்,
வீரன்வயல் - 614 738.
திருவாரூர் மாவட்டம்

# வட்டமேஜை

# ஆசையில் விழுந்த மண்!

காங்கிரஸ் எம்.எல்.ஏ.க்களின் ஆசையில் மண் அள்ளிப் போடுவது என்று கங்கணம் கட்டிக்கொண்டு இந்த வார கல்கி இதழைத் தயாரித்தீர்களோ?

**- ச.இராசன், திருச்சி**

சிறுவயதில் எங்கள் ஊரில் ஏரல் சேர்மன் சாமிக் கோயிலின் மண்ணை அள்ளி நெற்றியிலும், உடம்பிலும் பூசியிருக்கிறேன். அதன் வரலாறு எனக்கு இதுவரை தெரியவில்லை. கல்கி மூலம் கழனியூரன் மண்ணின் மகிமையை விளக்கிவிட்டார்.

**- எம்.தூசிமுத்து, சென்னை - 11**

ப்ளஸ் டூவில் தன் படிப்பைப் பற்றிக் கூறியிருந்த பாரதி, 'ஒன்றே செய் அதை நன்றே செய்' என்பதை அழுத்திக் கூறியது நல்ல வழி காட்டல்.

**- கே.கே.வெங்கடேசன், வேலூர்-1**

சென்ற மாதம் ஸ்ரீ சத்யசாய் பாபா அருளுடன் சென்னை திருவான்மியூரில் தொடர்ந்து பதினொரு நாட்கள் ருத்ரம் ஓதப்பட்டு, அதிருத்ர மகாயக்ஞம் நடந்து முடிந்தது. ஸ்ரீபாபா திருவான்மியூரைத் தேர்ந்தெடுத்ததில் ஒரு சிறப்பு உண்டு. ஞானசம்பந்தர் திருவான்மியூரைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்:

போதுலாவிய தண் பொழில்
சூழ்புரிசைப்புறம்
நீதில் அந்தணர் ஓத் தொழியாத்
திருவான்மியூர்ச்
சூது லாவிய கொங்கை யொர்
பங்குடையீர் சொலீர்
மூ தெயில்லொரு மூன்றெரியூட்டிய
மொய்ம்பதே

'நீதில் அந்தணர் வேதம் ஓதுதல் நீங்காத திருவான்மியூர்' என்று சம்பந்தர் போற்றிய ஊரில் பதினோரு நாட்கள் தொடர்ச்சியாக வேத சப்தங்கள் நீங்காமல் ஒலிக்கும்படி இருந்தது ஒரு சிறப்பே. ஞானசம்பந்தரின் பாடல்



காட்சியை, பார்க்கும் காட்சியாக மாற்றிய ஸ்ரீபாபாவின் மகிமை, நம்மை மெய்மறக்கச் செய்தது. மேலும் அபிஷேகம் செய்யப்பட்ட லிங்கத்துக்கு சுந்தர ஈசுவரன் என்று திருநாமம். சம்பந்தர் தேவாரத்தில் 'சுந்தரக் கழலடி....' என்று போற்றப்பட்டுள்ளது.

**- பூரம் கிருஷ்ணன், சென்னை - 17**

பிரபஞ்சனின் 'தலைக்கு மேலானது' சிறுகதை, தலைமுடியை வைத்து இப்படியும் ஓர் அற்புத இலக்கியத்தைத் தர முடியுமா என்ற ஆச்சர்ய உணர்வை வரவழைத்தது!

**- சு.சுந்தர், நெய்வேலி**

'செல்போனால் ஆபத்தா?' கட்டுரை, பல சந்தேகங்களை நிவர்த்தி செய்தது.

**- எஸ்.இரமணி, மதுரை**

ஸ்ரீ லலிதா

# தசாவதாரி

பண்டாஸுரனின் ஒன்பது பிள்ளைகளும் சின்ன குழந்தைகள்தானே... அந்தத் தலைமுறை அங்கே சண்டைக்கு வந்தால் அதே தலைமுறை இங்கேயிருந்து போக வேண்டும் என்பதற்காக ஒன்பது வயது பாலா திரிபுரசுந்தரி சண்டைக்குப் போனாள்.

போர்க் களத்துக்குப் போகக் கூடிய அந்தக் குழந்தைக்குக் கவசம் அணிவித்து, வெற்றித் திலகமிட்டு அனுப்பி வைத்து விட்டு, என்ன இருந்தாலும் சின்னக் குழந்தையாயிற்றே என்று அம்பாள் தவித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாளாம்.

போர்க் களத்தில் அந்தக் குழந்தை சண்டை போடுவதைப் பார்த்து மந்த்ரிணியும் வாராஹியும் சந்தோஷப்படுகிறார்கள். அந்த இருவரும் அம்பாளிடம் வந்து அதை விவரித்துச் சொல்லுகிறார்கள். சொன்னது மட்டுமல்ல, அந்தக் குழந்தை சண்டை போடுவதைப் பார்த்து இந்த இரண்டு பேருக்கும் வேகம் வருகிறது...

### விஷங்க-விசுக்ர வதம்

அதனால்தான் **மந்த்ரிணி அம்பா விரசித விஷங்கவத தோஷிதா** என்கிற திருநாமம். பாலா திரிபுரசுந்தரி சண்டை போட்டதைப் பார்த்துப் பிறந்த வேகத்தில், விஷங்கன் என்றோர் அசுரனை வதம் செய்தாள் மந்த்ரிணி. அதைப் பார்த்துச் சந்தோஷப்படக் கூடிய அம்பாள் பரமேசுவரியைக் குறிக்கிறது இந்தத் திருநாமம்.

வாராஹி என்ன பண்ணினாள்... மந்த்ரிணி ஒருத்தனை வதம் பண்ணினால், வாராஹியும் ஒருத்தரை வதம் பண்ண வேண்டும் அல்லவா...?

**விசுக்ர பிராண ஹரண வாராஹி வீர்யநந்திதா** என்ற திருநாமம் வாராஹி யாரை வதம் செய்தாள் என்று சொல்கிறது. விசுக்ரன் என்கிற அரக்கனை வாராஹி வீழ்த்த, அவனைப் பிராண ஹரணம் செய்த அந்த வீர்யத்தைப் பார்த்து அம்பாள் சந்தோஷப்பட்டாள்.

ஆக, சண்டை எப்படியெல்லாம் நடந்தது என்பதைச் சொல்லக்கூடிய நாமாவளிகள் இவை.

### விக்ன யந்த்ரம்

இப்படிச் சண்டை நடந்து கொண்டேயிருந்த போது பண்டாஸுரன் என்ன செய்தான், 'விக்னம்' என்று ஓர் யந்த்ரத்தை அனுப்பினான்... அவன் மந்த்ரத்தை, தந்திரத்தை, தூக்கத்தை, மயக்கத்தையெல்லாம் ஆயுதங்களாகப் பிரயோகித்தான் என்று பார்த்தோம். இப்போது விக்னம் என்ற யந்திரத்தை ஜபித்து அனுப்புகிறான். தடங்கலை ஏற்படுத்தக் கூடிய யந்திரம் அது.

பண்டாஸுரன் இந்த யந்திரத்தை அனுப்பும் ஆற்றலை எப்படிப் பெற்றான் என்றால், சாக்ஷாத் பரமேசுவரனிடத்திலே பெற்ற ஆற்றல்தான் அது.

ஆற்றல் என்பது ஒன்றுதான். அதை எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பது தான் முக்கியம். ஒரே விஷயத்தைச் சரியாகவும் பயன்படுத்தலாம்; தவறாகவும் பயன்படுத்தலாம்.

இவனிடம் இருப்பதோ பரமேசுவரனே கொடுத்த ஆற்றல். அப்படிப்பட்ட ஆற்றல் என்கிறபோது யாரும் பக்கத்திலேயே போக முடியாது - மந்த்ரிணி - வாராஹி யாரும் கிட்டே போக முடியாது. ஆனால், அம்பாளால் போக முடியும். ஆனால் அம்பாள் அப்படி உடனே போய் அவனை முறியடிக்க முற்படவில்லை. ஏனென்றால், அவன்

சுதா சேஷய்யன்

அந்த ஆற்றலைச் சரியாகப் பயன்படுத்து கிறானா என்று ஒரு வாய்ப்புக் கொடுத்துப் பார்க்கிறாள்.

'Give a long rope' என்று ஆங்கிலத்தில் சொல்லுவார்கள். குரங்கு கூட்டம் இருக்கிறது... அது எப்போதும் கூட்டமாகத்தான் சேர்ந்து வாழும். அந்தக் கூட்டத்தில் குட்டிகளெல்லாம் சேர்ந்து இருக்கும். குரங்குக்கே பொதுவாக வால் நீளம்... குட்டிகளுக்கு உடலை ஒப்புநோக்க வால் இன்னும் நீளமாக இருக்கும்.

## பொறுத்திருந்து ஆட்கொள்ளும் தெய்வம்!

இந்தக் குட்டிக் குரங்குகள் சும்மா இராது. அங்கேயும் இங்கேயும் குதித்



துக் கொண்டேயிருக்கும். அம்மா குரங்கு ஒரு யுக்தி பண்ணும்... குட்டி அங்கே இங்கே போய்விடக் கூடாது என்பதற்காக அதனுடைய வால் நுனியைப் பிடித்துக் கொண்டிருக்கும். அந்த வால் ரொம்ப நீளமாக இருப்பதனாலே அது இங்கேயும் அங்கேயும் குதிக்கிறபோதுகூட ஒன்றும் தெரியாது. அது பாட்டுக்குக் குதிக்கும். ரொம்ப எல்லை மீறிக் குதிப்பதாக அம்மா குரங்கு நினைத்தால் அந்த வாலைப் பிடித்து ஓர் இழு இழுக்கும். வாலைச் கண்டியவுடனேயே குட்டிக் குரங்கு கொஞ்சம் நேரம் அடங்கி சும்மா இருக்கும்! - இதுதானே 'கிவிங் எ லாங் ரோப்' என்பது!? ரொம்ப எல்லை மீறாத வரை பொறுத்திருந்து. அப்படி மீறுகிறபோது ஓர் இழு இழுப்பது - அதுவரை ஒரு வேளை திருந்தினால் திருந்தட்டுமே என்று விட்டு வைப்பது.

அம்பாளே அப்படி நம்மை 'நீண்ட சலுகை கொடுத்து வைக்கிறாள். தெய்வம் நமக்கு 'லாங் ரோப்' கொடுக்கிறது! பல சமயங்களில், நடப்பது எதுவும் தெய்வத்துக்குத் தெரியாது என்று நாம் எண்ணிக் கொண்டிருக்கிறோம். ஆனால், தெய்வம் தெரியாமல் உட்கார்ந்தில்லை. குதிக்கிற வரை குதித்து முடிக்கட்டும் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று நினைத்துத்தான் தெய்வம் உட்கார்ந்திருக்கிறது!

அப்படித்தான் அம்பாளும் எல்லா சக்திகளும் விழுந்துவிட்ட நேரத்தில் மந்த்ரிணியும் வாராஹியும் மட்டும் இருக்கக் கூடிய நேரத்தில் பண்டாஸுரன் விக்ன யந்திரத்தை அனுப்ப, அதை உடனே அழித்துவிடாமல் சற்றுப் பொருத்



திருந்துவிட்டு, பின்னர் பக்கத்தில் இருக்கக் கூடிய காமேசுவரனை நோக்கி ஒரு புன்னகை புரிகிறாள்.

## கணேசர்

சிவகாமேசுவரனைப் பார்த்து அம்பாள் புன்னகை புரிந்ததைத்தான் **காமேசுவர முகாலோக கல்பித ஸ்ரீ கணேசுவரா** என்கிற திருநாமம் உணர்த்துகிறது. அம்பாள் அப்படிப் புன்னகை செய்ததுமே கணேசர் தோன்றி, விக்ன யந்திரத்தைத் தூள் தூளாக-பொடிப் பொடியாக உடைத்தார்.

சரி, அதற்கப்புறம் என்ன ஆயிற்று...? கணேசர் விக்ன யந்திரத்தை உடைத்ததைப் பார்த்து, அம்பாள் பூரித்துப் போகிறாள். அதைச் சொல்லும் திருநாமம்

தான் **மாஹா கணேச நிர்பின்ன விக்ன யந்த்ர ப்ரஹர்ஷிதா** - மஹா கணேசர், விக்ன யந்திரத்தை நிர்பின்னம் செய்ததைப் பார்த்துச் சந்தோஷப்பட்டவள்.

## அஸ்திர மழை!

அடுத்த திருநாமம்: **பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ர ப்ரத்யஸ்த்ர வர்ஷிணீ**

பண்டாஸுரன் பேசாமல் இருக்கவில்லை. விக்ன யந்த்ரத்தை அனுப்பினவன், அது உடைந்து போய்விட்டது என்று தெரிந்ததும் வேறு பல அஸ்திரங்களை அனுப்பினான். அப்படி அவன் அனுப்பிய அத்தனை அஸ்திரங்களுக்கும் பிரதி அஸ்திரங்களை அனுப்பினாள் - வர்ஷித்தாள் அம்பாள். அந்தப் பக்கத்திலிருந்து அஸ்திர மழையாகப் பொழிந்தது; சரம் சரமாக வந்தது. அவற்றுக்குப் பிரதி அஸ்திர மழையாகப் பொழிந்தாள் அம்பாள்.

அடுத்து பண்டாஸுரன் என்ன செய்தான்...? தன்னுடைய முப்பது புத்திரர்களும் இறந்து போனார்கள் என்றதும் தனக்கு முன் இருந்த அசுர வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் இருக்கிறார்களல்லவா... ராவணன், மஹாபலி, ஹிரண்யாக்ஷன், ஹிரண்ய கசிபு - இப்படி எல்லோரையும் அனுப்பினானாம்! தன்னுடைய மாயா ஜாலத்தினால், தனக்கு முன்னே இருந்த அத்தனை ராக்ஷஸர்களையும் 'தோற்றுவித்து' அனுப்பினான்!

## தசாவதாரி!

பார்த்தாளாம் அம்பாள் - ராவணனை அழிப்பதற்காக மஹாவிஷ்ணு ஒரு ராமாவதாரம் எடுத்தார். கம்ஸனை அழிப்பதற்காக கிருஷ்ணாவதாரம் எடுத்தார். ஹிரண்யனை அழிப்பதற்காக நரசிம்ஹ அவதாரம் எடுத்தார். மஹாவிஷ்ணு பத்து அவதாரங்கள் எடுத்து இந்த ராக்ஷஸர்களையெல்லாம் அழித்தார்.



அம்பாள் தன்னுடைய பத்து நகங்களைப் பார்த்தாள்-

கர அங்குலி - பத்து நகங்கள் இருக்கின்றன - இரு கைகளில்... அவற்றிலிருந்து அந்தப் பத்து அவதாரங்களையும் எழுந்திருக்க வைத்தாள்!

**கர அங்குலி நகோத்பன்ன நாராயண தசாக்ருதி** - இந்தத் திருநாமம் அம்பாள் எடுப்பித்த அந்த தசாவதாரத்தையே குறிக்கிறது - நகங்களிலிருந்து தோன்றிய அவதாரங்கள். எத்தனை ராக்ஷஸர்கள் இருந்தார்களோ அத்தனை பேரையும் அழிப்பதற்கான அவதாரங்கள் அம்பாளுடைய திருநகங்களிலிருந்து உற்பத்தி ஆகின.

இதற்கப்புறம் பண்டாஸுரன் நேரடியாகச் சண்டைக்கு வருகிறான். வேறு வழியே இல்லாமல் அவனே வருகிறான். அப்படிச் சண்டைக்கு வருபவனை நேரடியாகச் சந்திக்கிறாள் அம்பாள். சந்தித்து, மஹா பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்து, அவனைச் சுற்றியுள்ள எல்லாவற்றையும் அழிக்கிறாள் - இதைக் குறிப்பதுதான் **மஹாபாசுபத அஸ்திராக்னி நிர்தக்த அஸுர ஸைனிகா** என்கிற திருநாமம்.

பண்டாஸுரனுடைய நகரத்துக்கு என்ன பெயர்..?

ராவணனுடைய நகரத்துக்கு இலங்கை என்று பெயர்; சூரபத்மனின் நகரம் வீரமஹேந்திரபுரம். பண்டாஸுரன் இருந்த நகரம் சூன்ய நகரம்! அவனைச் சுற்றியிருந்த சூன்ய நகரத்தையும் அவனது ஸைன்யத்தையும் எல்லாவற்றையும் அழிக்கிறாள். அவனையே சூன்யமாக நிற்க வைக்கிறாள்:

**காமேசுவராஸ்த்ர நிர்தக்த ஸபண்டாஸுர சூன்யகா**

இதைப் பார்த்துவிட்டு மூவுலகங்களும் கொண்டாடி மகிழ்கின்றன.

(தொடரும்)

## விமர்சனம்



'திருடா திருடி' டைரக்டர் சுப்ரமணிய சிவாவோட ரெண்டாவது படம். முன்னதுல ஜாலியா வந்து போனவர், இந்த முறை சீரியஸா களமிறங்கிட்டார்.

போலி பத்திரத்தால ஏமாத்தப்படுற ஜீவாவோட அப்பா தலையில, வேற ஒருத்தரோட இடத்தைக் கட்டிடறாங்க. உண்மை தெரிஞ்சு ஜீவா, அந்தக் கும்பலை எப்படி ஒழிச்சுக் கட்டுறாருங்கறதுதான் கதை.

பாசம் கொப்பளிக்குது நாகேஷோட நடிப்புல. மகனுக்காக உருகுறது அம்சம். ஜீவாவுக்கு புத்தக விற்பனையாளரா புது கெட்டப். அநியாயத்தைக் கண்டு பொங்கும்போது நம்மை உசுப்பி விடுறவர், தன்னோட கடை சூறையாடப்படும்போது கண் கலங்க வச்சிடுறார்.

பூஜா, அவரோட சண்டைக் காதலி. மோதல்ல ஆரம்பிச்சு வழக்கம்போல முடியுது. 'திருடா திருடி'ய ஞாபகப்படுத்தறதைத் தவிர்த்திருக்கலாம். அமைச்சரா வர்ற 'காதல்' தண்டபாணிக்கு நகைச்சுவை நல்லாவே வருது. கருணாஸ், கணேஷ் காமெடி பரவால்ல ரகம். டெல்லி கணேஷோட தெறிப்புகள் சுகம்.

இயக்குநர் சீமானும் ரெண்டொரு காட்சிகள்ல வந்து போறார். அவரோட தமிழ்ப் பாசம், நேசம்! மகாநதி ஷங்கர், கானா உலகநாதன், சிசர் மனோகர்னு பலரும் படத்துல பேசிக்கிட்டே இருக்கறதைத் தாங்க முடியல!

ஏகாம்பரத்தோட ஒளிப்பதிவுல காட்சிகளுக்குக் கனம் அதிகம். இசை தினா. குத்துப் பாட்டுக்கே முக்கியத்துவம் தந்திருக்கார். மன்மத ராசா பாட்டு மாதிரி இதுலயும் ஒரு பாட்டு. மெல்லிசை மெட்டுல யுகபாரதி தெரியறார். ஆக்ஷன் காட்சிகளுக்குக் கைகொடுத்திருக்கற கனல் கண்ணனுக்கு சபாஷ் போடலாம்.

'திருடா திருடி, ஈ கலந்த கலவைதான் பொறி'ன்றது பல ரசிகர்களோட தியேட்டர் ஸ்டேட்மெண்ட். அதைப் பொய்யின்னு சொல்றதுக்கில்ல. இடைவேளைக்குப் பிறகுதான் கதை தொடங்கறதால ரொம்ப ஆயாசமாயிடுது. ஏகப்பட்ட கேரக்டர்களைப் போட்டு தானும் குழம்பி, நம்மையும் குழப்பிடுறார் டைரக்டர். தாமதமா ரெண்டாவது படம் பண்ணினவர், இன்னும் தரமா தந்திருக்கலாம்!

- லஜ்ஜாவதி



# பொறி

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No. TN/CC(S)DN/144/06-08 Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN/CC(S)DN/70/06-08 Registered as a Newspaper in Srilanka.